நிஜ வாழ்க்கையை உங்கள் இல்லத்திரையில் பிரதிபலிக்கும்
பிரபல தொலைக்காட்சித் தொடர்...

B. நாகிரெட்டி
வழங்கும்

விஜயா வாஹினி டெலிபிலிம்ஸ்

# எங்க வீட்டுப் பெண்

ஜெயா டிவியில் ஒவ்வொரு
திங்கட்கிழமை இரவு 8.30 மணி
முதல் 9 மணி வரையில்
குடும்பத்துடன்
கண்டு மகிழுங்கள்




இத்தொடரை
வழங்குவோர்




மற்றும்






இது ஒரு VSN
கம்யூனிகேஷன்ஸ்
வெளியீடு











A 
ACTIVE

B 
BUZZ BOSS

C 
CADET DX

D 
DEVIL DX

E 
ELEPHANT

F 
FISH

G 
GIRAFFE

H 
HEN

I 
INSECT

J 
JOKER

K 
KIDD DX

L 
LI'L ANGEL
LAMBADA LIMBO

M 
MISSILE MISS INDIA Jr

N 
NEST

O 
ORANGE

P 
PIRANHA

Q 
QUEEN Jr

R 
ROBO COP

S  
SPARKY SALSA

T
TERMINATOR




V W

The largest range of kids bikes
**HERO CYCLES**
THE ABC OF CYCLING

HTA 5979 2001



இந்தியப் பண்பாடு-வரலாறு 25



இருளும் ஒளியும் 19



மாயாஜால மலை 11



அறிவுரை விற்ற சிறுவன் 28

# பொருளடக்கம்






## SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120

**புக்போஸ்டில்**

உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph: 044-234 7384
234 7399
**e-mail : advertisements @chandamama.org**

**டில்லி**
மோனா பாட்டியா
Ph: 011-651 5111
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile: 98203-02880
Ph: 022-266 1599
266 1946/265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# படித்த குழந்தையும் ஆசிரியரே!

ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக நம் தலைவிதியை நம் நாடு சுதந்திரம் அடையுமுன் நம்மை ஆண்ட ஆங்கிலேயர்கள் நிர்ண யித்து வந்தார்கள். அவர்களது கல்வித்திட்டம் அரசாங்கத் துறை களில் பணிபுரிய குமாஸ்தாக்களையே தயாரித்துக் கொடுத்தது என்று பலரும் குற்றம் சாட்டினார்கள்.

நம் நாடு சுதந்திரம் அடைந்ததும் அதே திட்டத்தைப் பின்பற்றிப் புது விஷயங்கள் கற்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. இதனால் திறமை மிக்கவர்கள் நம் நாட்டிற்குப் பயன்படாது போயினர். கல்வி கற்ற பலர் வேலை கிடைக்காமல் இருக்கிறார்கள். ஆயிரக் கணக்கானவர் கல்வி கற்க இயலாமல் இருக்கிறார்கள். இவர் களுக்கு வசதிகளை செய்து தரமான கல்வி அளிக்கப்படவேண்டும்.

பள்ளிகள் அருகில் இல்லாததால் அவர்கள் படிக்க முடிய வில்லை என்று கூறப்படுகிறது. கட்டடம் கட்டி நான்கு சுவர் களுக்கு நடுவே தான் கல்வி அளிக்கப்படவேண்டும் என்பது இல்லையே. தம் வீடுகளையே பள்ளிக்கூடங்களாகக் கருதி கல்வி கற்ற சிறுவர்களும் கூட தாம் கற்றதை மற்ற சிறுவர்களுக்கு போதிக்கலாம்.

மகாத்மா காந்தி பிறந்த நாள் அக்டோபர் 2. அவர் கல்வி பற்றிக் கூறுகையில் கல்வி கற்றவர்களெல்லாம் கல்வி கற்காதவர்களுக்குக் கல்வி கற்பிப்பதே சிறந்த தொண்டு என்றார். எனவே நாம் பெற்ற அறிவை யாவருக்கும் பகிர்ந்து அளிப்போம்.

ஆசிரியர் : **விஸ்வம்**

# இந்திய மாவீரர்கள் – 1

சிறார்களே! இந்தப் புதிர் வினாக்களை கவனமாகப் படியுங்கள். இதில் வரும் மாவீரர்கள் இந்திய வரலாற்றில் கூறப்பட்டவர்கள். உங்களுக்குத் தெரிந்திருக்குமே

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்

1 நான் கி.பி. 1526ல் இந்தியாவில் புயல் போல் வந்தேன். என் வம்சத்தவர் எனக்குப் புகழ் தேடித்தந்தனர். எங்கள் வம்சம் என் தாயாரின் குடும்பப் பெயர் கொண்டது. நான் யார்?

..............................................

2 அந்த அழகி சம்யுக்தயைத் தூக்கி என் குதிரை மீது ஏற்றி அதன் மீது அவளுடன் நானும் அமர்ந்து காற்றாய்ப் பறந்து விட்டேன். நான் யார்?

..............................................

3 நான் 17வது நூற்றாண்டில் ஒரு மயிலாசனத்தைச் செய்வித்ததோடு இறந்த என் அழகிய மனைவியின் நினைவாக ஒரு நினைவுச் சின்னமும் எழுப்பினேன். நான் யார்?

..............................................

4 நான் கிரேக்க மன்னனை எதிர்த்துத் தோல்வி அடைந்தேன். ஆனால் அவன் முன் தலை நிமிர்ந்து நின்று ''ஒரு மன்னனுக்குக் கொடுக்கப்படும் மரியாதையை எனக்குக் கொடு'' என்று கூறினேன். நான் யார்?

..............................................

5 நான் மாபெரும் போரில் மகத்தான வெற்றி பெற்றேன். ஆனால் அப்போரைக் கண்டு முற்றிலும் மனம் மாறி வன்முறையைக் கைவிட்டேன். நான் யார்?

..............................................

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழ் விடப்பட்டுள்ள இடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐந்து மாவீரர்களில் யாரை நீங்கள் மிக அதிகமாக விரும்புகிறீர்கள்? அதற்கு என்ன காரணம் என்று 'எனக்கு மிகவும் பிடித்தமான வரலாற்று மாவீரர்'' என்பதை பத்து சொற்களில் எழுதவும்:

..............................................

..............................................

..............................................

போட்டியில் கலந்து கொள்பவர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................................

..............................................

பின்கோடு: ...................... போன்: ......................

கலந்து கொள்பவரின் கையெழுத்து: ..............................

பெற்றோரின் கையெழுத்து: ..............................

இந்தப் பக்கத்தை தனியாக எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

## இந்தியா மாவீரர்கள் புதிர்போட்டி-1
## சந்தமாமா இந்தியா லிமிடெட்

நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபிசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097

அனுப்ப வேண்டிய கடைசி தேதி நவம்பர் 5, 2001

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 ஆண்டிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்து மூன்று தேர்ந்தெடுக்கப்படும். வெற்றிபெற்ற சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற வகையில் உரிய அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் பெறப்பட்டால், 'எனக்கு மிகவும் பிடித்தமான வரலாற்று மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்டவற்றில் நாம் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கும் கூப்பன்களுக்குப் பரிசு அளிக்கப்படும்
3. நடுவர்களின் தீர்ப்பே முடிவானது.
4. இதன் தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிப்பெற்றவர்களுக்கு தபால் வாயிலாக முடிவு அறிவிக்கப்படும்

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# அறியாமை அகன்றது!

பொன்னையயன் தனக்கிருந்த ஒரு ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்து அதில் கிடைத்த வருமானத்தைக் கொண்டு திருப்தியுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். ஒரு நாள் அவனது மாமனாரான சின்னைய்யன் ஒரு கறவை எருமையும் அதன் கன்றையும் ஓட்டி வந்து பொன்னைய்யனிடம், ''மாப்பிள்ளை! இதனால் உங்கள் வீட்டில் பால், தயிர், நெய்க்குக் குறைவே இராது. வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

பொன்னைய்யனும் சற்று யோசித்து விட்டு ''சரி மாமா! உங்கள் விருப்பப்படியே இதனை ஏற்று கொல்லைப்புறக் கொட்டகையில் என் இரு எருதுகளோடு சேர்த்து கட்டி வைத்துப் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான். அது கேட்டு அவன் மனைவியும் அவனது மாமனாரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். பொன்னைய்யனின் மனைவி அப்போதே எருமைப்பால் கறந்து ஒரு சொம்பில் கொஞ்சம் ஊற்றித் தன் கணவனிடம் கொடுத்து ''முதலில் கறந்த இந்தப் பாலை நம் ஊர் கிருஷ்ணர் கோவிலுக்கு எடுத்துச் சென்று நைவேத்தியம் செய்யும்படி கொடுங்கள்'' என்றாள்.

பொன்னைய்யனும் அந்தப் பாலை எடுத்துக் கொண்டு கிருஷ்ணர் கோவி லுக்குப் போய் அர்ச்சகரிடம் ''சுவாமி! இந்தப் பால் முதன்முத லாக என் வீட்டு எருமையிலிருந்து கறந்தது இதைக் கிருஷ்ண பகவானுக்கு நைவேத்தியம் செய்யுங்கள்'' என்றான்.

அர்ச்சகரோ ''எருமைப்பாலையா நைவேத்தியம் செய்வது? அது பெரும் பாவம். கிருஷ்ணருக்குப் பசு மாடு, பசும்பால் என்று தான் பிடிக்கும். நல்ல வேளையாக முதலிலேயே எருமைப் பால் என்று சொல்லி விட்டாய். அதனால் நான்

-சிவனார் செல்வன்-



நைவேத்தியம் செய்து கொடுக்க மாட்டேன். நீயே இங்கே நின்ற படியே பகவானுக்குப் பாலைக் காட்டி அவருக்கு சமர்ப்பித்து விட்ட தாகக் கூறி மனதைத் தேற்றிக் கொள். இந்தப் பாலை மண்டபத்திலுள்ள சாதுவுக்குக் குடிக்கக் கொடுத்து விட்டு புண்ணியம் அடை,'' என்று கூறினார்.

பொன்னையனும் தான் நின்ற இடத்திலிருந்தபடியே பாலைக் கிருஷ்ண விக்கிரகத்திற்குக் காட்டி விட்டு அந்த சொம்புப்பாலை மண்ட பத்திலிருந்த சாதுவிடம் பயபக்தி யுடன் கொடுத்தான். அவரும் அதை வாங்கிக் குடித்து விட்டு ''சர்க்கரை போடாமலே இந்தப் பால் மிகவும் இனிப்பாக இருக்கிறது நீ சகல சௌபாக்கியங்களையும் பெற்று நீண்ட காலம் சுகவாழ்வு வாழ்வா யாக'' என்று ஆசிர்வதித்துக் கண் களை மூடி தன் வலது கையை மூடி உயரத் தூக்கிக் கொண்டு சற்று நேரம் தியானத்தில் இருந்தார்.

இரண்டு நிமிடங்களுக்குப் பின் அவர் கண்களைத் திறந்து கையைத் தாழ்த்தி அதை விரிக்கவே அவரது உள்ளங்கையில் இரண்டு ஸ்படிகக் கற்கள் இருந்தன. அவர் அவற்றைப் பொன்னையனிடம் கொடுத்து ''இவை புனிதமானவை. இவற்றை தினமும் பூஜை செய்து வா. உன் வீட் டில் செல்வம் பெருகும். உனக்கும் இரு ஆண் குழந்தைகள் பிறந்து உன் வம்சத்தைத் தழைக்க வைக்கும்'' என்றார்.

பொன்னையனும் அவற்றை பெற்றுக் கொண்டு வீட்டிற்கு வந்து தன் மனைவியிடம் நடந்ததைக் கூறி னான். அவளும் அந்த ஸ்படிகக் கற்களை பூஜை அறையில் வைத் தாள். இருவரும் தினமும் அதற்குப் பூஜை செய்து வந்தார்கள். அவர் களுக்கு அப்போது முதல் நல்ல காலம் பிறந்தது. நல்ல விளைச்சல் கண்டது. இரண்டு வருடங் களுக்குப் பின் மேலும் வயல்கள், மாடுகள், எருமைகள் என வாங்கி அவன் நிறை யப் பணம் சம்பாதித்து விட்டான். சாது கூறியபடி அவனுக்கு இரு ஆண் குழந்தைகள் பிறந்தன. அவர்களும் வளர்ந்து பெரியவர்கள் ஆனார்கள். ஒருவன் விவசாயத்தில் ஈடுபட் டான். மற்றவன் மிருகங்களுக்கு வைத்தியம் செய்பவனாகச் சிறந்து விளங்கினான்.

பொன்னையன் தன் மூத்த மகனின் திருமணத்தை நிச்சயித்து அது

நல்ல விதமாக நடக்க கிருஷ்ண பகவானின் அருள் வேண்டி சிறப்பு வழிபாட்டைச் செய்தான். பூஜை முடிந்து அவன் தன் குடும்பத்தோடு ஆலயத்திலிருந்து வெளியே வந்த போது அவர்கள் முன் ஒரு சாது வந்து நின்றார்.

அவர் புன்னகை புரிந்தவாறே ''பொன்னையா! நீ நல்ல விதமாய் வாழ்ந்து வருகிறாய் என்று இவ்வூரார் சொல்லக் கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றார்.

அந்த சாதுவை உற்றுப் பார்த்த பொன்னையன் அவரது கால்களில் விழுந்து வணங்கி ''சுவாமி! தங்களை எப்போது பார்ப்போம் என்று நானும், என் குடும்பத்தாரும் ஏங்கிக் கொண்டிருந்தோம். இன்று தான் எங்கள் விருப்பம் நிறைவேறியது'' என்றான்.

பிறகு அவன், தான் பூஜையில் நைவேத்தியத்திற்குக் கொடுத்துத் திரும்ப அர்ச்சகரிடமிருந்து பெற்ற பால் சொம்பை அவரிடம் கொடுத்து, ''சுவாமி! இது எங்கள் வீட்டுப் பசும் பால். கிருஷ்ணருக்கு நைவேத்தியம் செய்து அர்ச்சகர் கொடுத்தார்'' என்றான்.

அப்போது அர்ச்சகரும் தடியை ஊன்றிக் கொண்டு அங்கு வந்தார். அப்போது சாது அந்த பால்ச்சொம்பை வாங்கிக் கொள்ளாமல் ''அன்றைய பால் சம்பவம் எனக்கு நன்கு நினைவில் இருக்கிறது. பகவானுக்கு எதையும் பக்தியுடன் சமர்ப்பிக்கலாம். அவர் பசும்பால், எருமைப்பால் என்று வித்தியாசம் பார்ப்பதில்லை. அதை இந்த அர்ச்சகர் புரிந்து கொள்ளவில்லை. அவருக்கு இதை புரிய வைக்கவே உன்னிடம் இரு ஸ்படிகக் கற்களைக் கொடுத்து பூஜை செய்யச் சொன்னேன். நீயும் பக்தியுடன் அவற்றை பகவானாக எண்ணி பூஜை செய்து வந்தாய். அதனால் அவரது அருளால் நீ சகல சம்பத்துகளையும் அடைந்தாய். இதற்கு நீ கடவுள் மீது கொண்ட நம்பிக்கையே காரணம்'' என்றார்.

அர்ச்சகரும் தலை குனிந்தவாறே சாதுவிடம் ''என் அறியாமை அகன்றது'' எனக் கூறி விழுந்து வணங்கினார்.






# மாயாஜால மலை

## 9

(கரடியப்பனை நடத்திக் கூட்டிக் கொண்டு கஜவர்மனும் ஜீவதத்தனும் குளக்கரையை அடைந்தார்கள். அங்கு அவர்கள் சொர்ணத்தைக் கண்டார்கள். சமரபாகு இல்லாத போது அவனது வீரர்களுக்கும் வீரபுர மன்னனின் வீரர்களுக்குமிடையே கைகலப்பு ஏற்பட்டது. இதைக் கேட்டு மிருகக்காட்சி சாலை அதிகாரி சில வீரர்களுடன் அந்த இடத்திற்கு விரைந்தான். அதன் பிறகு)

வீரபுரமன்னனின் மிருகக்காட்சி சாலை அதிகாரி ஏழு வீரர்களோடு வந்தான். அவர்களில் ஒருவனுக்குக் காலில் காயம் பட்டதால் நொண்டிக் கொண்டு யாவருக்கும் பின்னால் வந்து கொண்டிருந்தான். சமரபாகு வின் வீரர்கள் நால்வரே இருந்தபோதி லும் தம்மைவிட அதிக எண்ணிக்கை யுள்ள வீரபுரத்து வீரர்களை எதிர்க்கத் துணிவுடன் நின்றார்கள்.

மிருகக்காட்சி அதிகாரி அவர் களுக்குச் சற்றுத் தொலைவில் நின்று ''நீங்களெல்லாம் வியாபாரிகளா? எங்கிருந்து வருகிறீர்கள்? கத்தி பிடித்து சண்டை போடத்தெரியுமா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட சமரபாகு வின் வீரர்கள் ''உங்களுக்கெல்லாம் கத்தி என்றால் என்னவென்றாவது தெரியுமா?'' என்று ஏளனமாய்க் கேட்டார்கள். அதைக் கேட்ட வீரபுர வீரர்கள் ஆத்திரம் அடைந்து தாக்கு தலை ஆரம்பித்தார்கள்.

சமரபாகுவின் வீரர்கள் பதில் தாக் குதலில் மூன்று வீரர்களை வீழ்த்தி னார்கள். நொண்டிக் கொண்டு வந்த வீரனும், மிருகக்காட்சி சாலை அதி காரியும் பின்வாங்கி ஓடினார்கள். தம் மேலதிகாரியே ஓடிவிட்டது கண்டு இரு வீரர்கள் தம் வாட்களைக் கீழே போட்டுவிட்டுச் சரணடைந்தார்கள்.



இந்தச் சண்டையால் ஏற்பட்ட பெரும் சத்தம் கேட்டுச் சில மலை வாசிகள் அங்கு வந்தார்கள். அவர்கள் அந்தச் சண்டை யார் யாருக்கும் இடையே நடந்தது என்பது தெரி யாமல் விழித்தனர். அப்போது சமர பாகுவின் வீரர்கள், ''இனி சமரபாகு தான் உங்களை ஆளும் மன்னன். நீங்கள் வீரபுர மன்னனுக்குக் கப்பம் கட்டத் தேவையில்லை'', என்றார்கள்.

மலைச்சாதியினர் கூட்டத்தில் இருந்த வயதான ஒருவன் முன்வந்து, ''ஐயா! நீங்கள் சொல்வதை ஏற்கி றோம். உங்கள் தலைநகரம் எங்கே உள்ளது?'', என்று நடுநடுங்கிய வாறே கேட்டான். அவனுக்கு சமர பாகுவின் வீரன் ஒருவன் பதில் சொல்ல ஆரம்பித்தபோது இரு மலை வாசிகள் இரு குதிரைகளைப் பிடித்து இழுத்துக் கொண்டு அங்குவந்து, ''இவற்றை வீரபுர வீரர்கள் விட்டு விட்டு ஓடிவிட்டார்கள். மரத்தில் கட்டப்பட்டிருந்த இவற்றை நாங்கள் அவிழ்த்து நடத்தி வருகிறோம்'' என்றார்கள்.

அப்போது அந்த வீரன், ''பேஷ்! இவற்றை எம்மோடு மலைக் கோட்டைக்கு நடத்திக் கொண்டு வாருங்கள். உங்களுக்குத் தக்க சன் மானம் கிடைக்கச் செய்கிறேன்'' என் றான். அவர்களும் அதற்குச் சம் மதிக்கவே, சமரபாகுவின் வீரர்கள் அவர்களையும், தம்மிடம் சரண டைந்த வீரபுர வீரர்களையும் கூட்டிக் கொண்டு ஒட்டகங்கள் கட்டப்பட் டிருந்த இடத்திற்குச் சென்றனர். வழியில் அவர்கள், மிருகக்காட்சிச் சாலை அதிகாரி, தான் பிடித்த மிரு கங்களைக் கூண்டுகளில் அடைத்து வைத்திருப்பதைக் கண்டார்கள்.

அவற்றைக் கண்ட சமரபாகுவின் வீரர்கள், ''இந்த மிருகங்களைக் கூண்டுகளோடு நாம் கொண்டு போய் விடலாம். கூண்டுகளின் கீழ் சக்கரங் கள் இருப்பதால் இந்த வேலை எளி தில் முடிந்துவிடும்'' என்றார்கள். மலைவாசிகளும் தாம் அவற்றை மலைக்கோட்டைக்கு இழுத்து வருவ தாகக் கூறவே, வீரர்கள் கூண்டுகளில் கயிறுகளைக் கட்டினார்கள். மலை வாசிகளும், அவற்றின் நுனிகளைப் பிடித்துக் கூண்டுகளை இழுத்துக் கொண்டு சென்றார்கள்.

மலை மீது கோட்டையை நிர்

மாணித்துக் கொண்டிருந்த சொர்ணம், மலையடிவாரத்தில் ஒட்டகங்களையும், குதிரைகளையும், மலைவாசிகளையும் கண்டு ஆச்சரியப்பட்டான். அவன் சட்டெனத் தான் செய்து கொண்டிருந்த வேலையை நிறுத்தி விட்டு, கீழே இருந்தவர்களை உற்று நோக்கினான். அப்போது கீழே நின்ற சமரபாகுவின் வீரர்களில் ஒருவன் சொர்ணம் தாம் செய்த செயலைப் பாராட்டப் போகிறார் என்று எண்ணித் தன் குதிரையிலிருந்து குதித்து, மலை மீது ஏறி சொர்ணம் இருந்த இடத்தை அடைந்தான்.

சொர்ணமும், அவனைப் பார்த்து, ''நீங்களெல்லாம் வேட்டையாடத் தானே போனீர்கள். ஆனால் இந்தக் குதிரைகள் உங்களுக்கு எப்படிக் கிடைத்தன?'', என்று கேட்டான். அந்த வீரனும் சொர்ணத்தை வணங்கி, ''ஐயா! நாங்கள் வீரபுர வீரர்களுடன் போராடி, அவர்களைத் தோற்கடித்தோம். இருவரைச் சிறைப்பிடித்தும் கொண்டு வந்திருக்கிறோம். மற்றவர்கள் தப்பி ஓடிவிட்டார்கள்'' என்றான்.

அதைக் கேட்ட சொர்ணம் திடுக்கிட்டு, ''வீரபுர மன்னனின் வீரர்களுடனா சண்டை போட்டீர்கள்? அவர்களில் சிலர் ஓடிப் போய் விட்டார்களா? இது ஆபத்தாயிற்றே. ஏன் அவர்களுடன் சண்டை போட்டீர்கள்?'' என்று கேட்டான் சற்றுக் கோபமாக. அதைக் கேட்ட அந்த வீரன் தாம் தவறான வேலையை செய்து விட்டதாக சொர்ணம் எண்ணுகிறார் என்று புரிந்து கொண்டான். அதனால் அவன் நடந்ததை அப்படியே கூறாமல் தன் கைச்சரக்கையும் சேர்த்துத் திரித்து





''அவர்கள் கூட்டமாக வந்து திடீரென எங்களைத்தாக்கினார்கள். சமரபாகு மன்னரை இழிவாகப் பேசினார்கள். எங்கள் ஒட்டகங்களைக் கைப்பற்ற முயன்றார்கள். இந்த நிலையில் நாங் கள் கைகட்டிக் கொண்டு இருக்க முடியுமா? பதிலுக்குத் திருப்பித் தாக்கினோம்'' என்றான்.

அதைக் கேட்ட சொர்ணம் சற்று நேரம் எதுவும் பேசாமல் இருந்தான். இதற்குள் அடி வாரத்தில் நின்ற மற்ற வீரர்களும் அங்கு வந்தார்கள். அவர் களை எல்லாம் சொர்ணம் பார்த்து ''சரி, நடந்தது என்னவோ நடந்து விட்டது. நாம் வீரபுர மன்னரை விரோதித்துக் கொள்ளக் கூடாது. உங் களிடம் தோற்று ஓடியவர்கள் இப் போது மன்னனிடம் எல்லாவற்றை யும் கூறி இருப்பார்கள். அந்த மன்னன் பெரும் படையுடன் வந்து நாம் கட்டிக் கொண்டிருக்கும் இந்த கோட் டையை அழித்து விடுவானே. இந்த சமயத்தில் சமரபாகு மன்னர் கூட இங்கே இல்லையே. அந்த இரு க்ஷத்திரிய வீரவாலிபர்களான கஜவர் மனும் ஜீவதத்தனும் இருந்தால் கூட உதவுவார்களே. அடடா? எப்படிப் பட்ட சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டோம்'' என்று கூறிப் பெரு மூச்சு விட்டான்.

சொர்ணம் ஊகித்தது சரியே. சமர பாகுவின் வீரர்களிடம் தோற்று ஓடிப் போன வீரபுர வீரர்களும் மிருகக் காட்சி சாலை அதிகாரியும் தலை நகர வீதிகளில் சென்றவாறே ''நம் நாட்டிற் குப் பேராபத்து! எதிரி காட்டில் மலை மீது கோட்டை கட்டி வீரர்களைத் திரட்டி பயங்கர ஆயுதங்களால் நம்மைத்தாக்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறான்.'' என்று கத்தி னார்கள். அச்சமயத்தில் வீரசிம்ம மன்னன் தன் அரண்மனையில் தன் மந்திரியுடன் பேசிக் கொண்டிருந் தான். பலத்த கூச்சலைக் கேட்டதும் என்னவென்று பார்க்கலானான்.

மிருகக்காட்சி சாலை அதிகாரியும் அவனோடு வந்த வீரனும் அரண் மனை வாசலில் வந்து நின்றார்கள். அவர்கள் உள்ளே செல்ல அரண் மனை வாசலில் நின்ற காவலாளி அனுமதித்தான். அவர்கள் உள்ளே அனுமதிக்கப்பட்டதும் மந்திரி அந்த அதிகாரியிடம் என்ன விஷயம் என்று கேட்டான்.

அவனும் மன்னனையும் மந்திரி யையும் வணங்கி ''அரசே! நம்மிருகக்

காட்சி சாலையில், சில மிருகங்களை யும் பறவைகளையும் பிடித்து வைக்க லாம் என எண்ணிக் காட்டிற்குள் சில வீரர்களுடன் சென்றேன். அங்கு சமரபாகு என்ற மன்னனின் வீரர்கள் ஒட்டகங்களின் மீதமர்ந்து வந்து எங்களைத்தாக்கினார்கள். நாங்கள் அவர்களை எதிர்த்து அவர்களில் பலரை எம் வாள்களுக்கு இரையாக்கி னோம். நமது வீரர்களில் ஒரு சிலருக்கு லேசான காயங்களே ஏற் பட்டன. நானும் இந்த வீரனும் உங்களுக்கு இதைத் தெரிவிக்கவே ஓடோடி வந்தோம்'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் மந்திரி யிடம் ''மந்திரியாரே! நம் எல்லை யில் எதிரிகளின் நடமாட்டம் இருப் பது இந்த அதிகாரி கூறுவதிலிருந்து தெரிகிறது. உடனே நம் சேனாதி பதியை இங்கே வரவழையுங்கள்'' என்று கட்டளை இட்டான். மந்தி ரியோ அந்த அதிகாரி கூறியதை நம்ப வில்லை. அவனை தன்னருகே வரும் படி அவர் கூறினார். அவனும் அவர ருகே சென்றான். அவனை மேலும் கீழுமாகப் பார்த்தார். அவனது உட லில் ஒரு சிறுகாயம் கூட ஏற்பட்டி ருக்கவில்லை. ஆடைகளில் எதுவும் கிழிந்தும் இருக்கவில்லை.

மந்திரி புன்னகை புரிந்து விட்டு உடனே சேனாதிபதியை அழைத்து வர ஒரு வீரனை அனுப்பினார். சேனாதிபதியும் மிகுந்த ஆர்ப்பாட்டத் துடன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் மன்னனையும் மந்திரியையும்



வணங்கவே மந்திரியும் ''இந்த அதிகாரி நம் நாட்டின் மீது படை எடுக்க யாரோ ஒரு மன்னன் ஏற்பாடு களைச் செய்துக் கொண்டிருப்பதாகக் கூறுகிறான். யாரோ ஒட்டக வீரர் களாம்! இது பற்றி உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

சேனாதிபதியும் ''இந்த ஒட்டக வீரர்கள் பற்றி எனக்கு முன்பே தகவல் கிடைத்தது. அதனால் அவர்களைப் பற்றிய தகவல்களைச் சேகரித்து வர நிரஞ்சனன் என்பவனின் தலைமை யில் ஒற்றர்களை அனுப்பினேன். ஆனால் அப்பகுதிக்கு அவன் சென்ற தும் அழகிய மலைவாசிப் பெண் ஒருத்தியை மணந்து கொண்டு அங் கேயே தங்கி விட்டான். எனவே சரி யான தகவல்கள் கிடைப்பதில் சற்றுத் தாமதம் ஏற்பட்டிருக்கிறது'' என்றான்.



மந்திரியும் ''இது உங்களது திறமை எவ்வளவு என்பதைத் தான் காட்டுகிறது. உங்களுக்கு சரியான ஆட்களைத் தேர்ந்தெடுக்கத் தெரியவில்லை. நீங்கள் நியமித்தவன் சரியாக வேலை செய்யவில்லை. அதனால் ஏற்பட்ட கால தாமதம் எதிரிக்கு அனுகூலமாகி விட்டது. எந்த வேலைக்கு யாரை நியமித்து அனுப்ப வேண்டும் என்பது உமக்குத் தெரிய வேண்டாமா?'' என்று சற்று காட்டமாகவே கேட்டார்.

நிலைமை வாக்குவாதத்தில் போய் மனக்கசப்பில் முடிந்து விடுமோ என்று பயந்த மன்னன் குறுக்கிட்டு ''சேனாதிபதியே! நீ உடனே நம் படையுடன் போய் எதிரியின் மலைக் கோட்டையை இடித்துத் தரை மட்டமாக்கி விட்டு அந்த மன்னனைச் சிறைப்படுத்தி இழுத்து வா'' என்று கட்டளை இட்டான். சேனாதிபதியும் அவ்வாறே செய்வதாகக் கூறி மன்னனை வணங்கி விட்டுச் சென்றான்.

சேனாதிபதி நூறு குதிரை வீரர்களையும் இருநூறு காலாட்படை வீரர்களையும் தேர்ந்தெடுத்துக் கொண்டு சமரபாகுவின் ஆட்கள் கட்டிக் கொண்டிருக்கும் மலைக் கோட்டையுள்ள பகுதிக்குச் சென்றான். சமரபாகு கரடியப்பனிடம் அகப்பட்டு கொண்ட நாள் முதல் சொர்ணம் தான் அவனது ஆட்களுக்குத் தலைவன் போல இருந்து வந்தான்.

வேட்டைக்குப் போன தன் ஆட்கள் வீரபுர வீரர்களுடன் சண்டையிட்டு விட்டு மலைவாசிகளுடனும் கூண்டுகளில் மிருகங்களோடும் வந்ததைக் கண்ட சொர்ணம் வீரபுர மன்னனால் தான் கட்டும் கோட்டைக்கு ஆபத்து வரலாம் என எண்ணித் தக்க ஏற்பாடுகளை முன் கூட்டியே செய்யலானான்.

ஒரு வேளை வீரபுரத்துப் படை தன் வீரர்களைத் தோற்கடித்து விட்டால் அவர்களிடம் அகப்பட்டு விடாமல் தப்பி ஓடிவிட மலைக்குள்ளிருந்த இரண்டு சுரங்கப்பாதைகளையும் பார்த்து வைத்துப் கொண்டான். எதிரிப்படை வரும் வழியில் மலைவாசிகள் மறைந்திருந்து அதனைத் தாக்கி அழிக்கவும் சொர்ணம் தயார் செய்து விட்டான். கூண்டுகளிலிருந்த

சிங்கமும் புலிகளும் மலைவாசிகளின் கட்டுப்பாட்டில் தான் இருந்தன. எதிரிகள் மலை மீது ஏற முயன்றால் அம்மிருகங்களைக் கூண்டுகளிலிருந்து திறந்து விட்டு அவர்கள் மீது ஏவி தாக்கும்படியும் செய்ய வேண்டும் என்று அவன் மலைவாசிகளிடம் சொல்லி வைத்தான். அந்த மிருகங்கள் எதிரிப் படையைத் தாக்கிக் குழப்பம் விளைவிக்கும் போது மலைவாசிகள் தப்பி ஓட விட வேண்டும் என்றும் சொர்ணம் சொல்லி வைத்தான்.

இவ்வாறு ஏற்பாடுகளை எல்லாம் சொர்ணம் செய்து முடித்த சில நாட்களுக்குப் பிறகு வீரபுர மன்னனின் படைகள் வந்து கொண்டிருப்பதாக சமரபாகுவின் வீரர்களில் ஒருவன் தகவல் கொடுத்தான். இதனால் சொர்ணம் தன் ஆட்களுக்கு ஈட்டிகளையும் கத்திகளையும் கொடுத்து எதிரிகளைத் தாக்கத் தயாராக இருக்குமாறு கூறினான்.

வீரபுர சேனாதிபதி தன் குதிரை வீரர்களுடனும் காலாட்படையுடனும் மலையடி வாரத்திற்கு வந்து நின்று ''அடே! நான் வீரபுர சேனாதிபதி. மரியாதையாக ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டு என்னிடம் சரணடைந்து விடுங்கள். இது என் கட்டளை'' என்று உரக்கக் கூறினான். ஆனால் சொர்ணத்தின் ஆட்களோ ஆயுதங்களை எதிரிகள் மீது குறி வைத்து எறிந்தார்கள். ஒரு ஈட்டி சேனாதிபதியின் புஜத்தில் குத்தியது.

அதைக் கண்ட வீரபுரத்து சேனாதிபதி! ''அடே! எங்கள் படையைப் பார்த்தீர்களா? இவ்வளவு பெரிய படையை எதிர்த்து உங்களால் சண்டை போட முடியுமா? மரியாதையாக சரணடைந்து விடுங்கள். இல்லாவிட்டால் உங்கள் உயிர் இராது'' என உரத்த குரலில் எச்சரித்தான். ஆனால் சமரபாகுவின் வீரர்கள் அதைச் சற்றும் சட்டை செய்யாமல் மேலும் மேலும் ஆயுதங்களையும் கற்களையும் வீரபாகுவின் படை மீது வீசினார்கள். (தொடரும்)



உங்களுக்கான புதிர் வினாக்கள்

# சில்கா ஏரி



ஆசியாவிலேயே மிகப் பெரிய உப்பு நீர் ஏரியான ஒரிஸ்ஸாவின் சில்கா ஏரியைப் பார்த்திருக்கிறீர்களா? 1, 100 கி. மீ. பரப்பளவுள்ள இந்த ஏரிக்கு உல கின் பல பகுதிகளிலுள்ள பறவைகள் வரு வதைக் காணலாம். பலவித வெள்ளை நிறக் கடல் கழுகுகளும், பழுப்பு நிறக் காட்டுக் கோழிகளும், கொக்குகளும் இங்கு வாழ்கின்றன. வேறு சில குளிர் காலத்தில் வந்து போகின்றன. இப் பறவைகளை இங்கு காண்பது சிறப்பு அம்சமாகும்.

சிறுத்தைகள், கருப்பு மான்கள், குரங்குகள், பல்விதப் பூனைகள், கீரிகள், பாம்புகள், ஆமைகள், பல்லிகள் எனப் பல வகைப்பட்ட ஜீவராசிகளை இந்த ஏரியைச் சுற்றியுள்ள குன்றுகளிலும், காடுகளிலும் காணலாம். மோட்டார் படகுகளால் இந்த ஏரியுள்ள பல தீவு களுக்கு நீங்கள் போகலாம். படகுகளைச் செலுத்தவும் மீன் பிடிக்கவும் இங்கு வசதிகள் உள்ளன. தண்ணீர் விளை யாட்டுப் பகுதிக்குப் போய் நீரில் விளையாடலாம்.

ஏரி 23 கி. மீ. தள்ளி சதபாடா என்ற இடத்தில் கடலோடு சேர்கிறது. இந்த கண்கவர் இடத்தில் சில சமயங்களில் டால்பின்களைக் கூடக் காணலாம்.

சில்காவை அடைய புரியிலிருந்தும் கட்டக், புவனேஸ்வர் ஆகிய இடங் களிலிருந்தும் பஸ்கள் உள்ளன. கோல் கத்தா, சென்னை ரயில் பாதையில் பாலு காம், சில்கா, ரம்பா ஆகிய ரயில் நிலயங் களில் இறங்கி சில்கா ஏரியை அடைய லாம். இதை அடைய மிக அருகிலுள்ள விமான நிலயம் புவனேஸ்வர்.

## உங்களுக்கான புதிர் வினாக்கள்

(14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)

### போட்டி — II

1. இடம் பெயர்ந்து செல்லும் பறவைகளுக்கான சரணாலயம் ஒன்றைச் சில்கா ஏரி பெற்றுள்ளது. அப்பறவைக்குள் கவர்ச்சி மிக்கது எது?

   ---------------------------------

2. தென் அமெரிக்காவிலிருந்து பசிபிமாக் கடலைக் கடந்து வரும் ரிட்ரி கடல் ஆமைகளின் சரணாலயம் ஒரிஸ்ஸாவில் எங்கு உள்ளது?

   ---------------------------------

3. ஒரிஸ்ஸாவிலுள்ள புகழ் பெற்ற மிருகக் காட்சி சாலையில் ஒரு வித சிறப்பான புலிகள் உள்ளன. அந்த மிருகக் காட்சி சாலையின் பெயரையும் புலி வகையின் பெயரையும் எழுதவும்.

   ---------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**Orissa Tourism Quiz Contest**
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097.**

பெயர் : ..........................................

வயது : ..........................................

முகவரி : ..........................................

..........................................

பின்கோடு................ போன் .............




Winners picked by Orissa Tourism in each contest will be eligible for **3-days, 2-night** stay at any of the **OTDC Panthanivas**, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar - 751 014. Ph : (0674) 432177, Fax : (0674) 430887, e-mail : ortour@sancharnet.in. Website : Orissa-tourism.com

வேதாளம் சொல்லும் கதை

# இருளும் ஒளியும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்தப் பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி சிரமப் படுகிறாய்? ஏதாவது அபூர்வ சக்தியை அடைய முயல்கிறாயா? இது வீண்முயற்சி என்பதை விளக்க உனக்கு ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லத் தொடங்கியது.

வெகு காலத்திற்கு முன்



மலய நாட்டில் மகாராசன் என்ற விவசாயி இருந்தான். அவனுடைய மகன் மாதவன். தாயில்லாது போன தால் தந்தையால் அளவுக்கு மீறி செல்லம் கொடுக்கப்பட்டு அவன் முழுச் சோம்பேறியாக ஆகி விட் டான். சரியாகப் படிக்கவில்லை. இப் படிப்பட்ட தன் மகனுக்கு ஒரு கல் யாணத்தைச் செய்து வைத்தால் அவன் திருந்தி விடுவான் என மகாராசன் எண்ணினான்.

அதனால் அவன் தன் தூரத்து உற வினன் ஒருவனின் மகளான துர்க்கா வைத் தன் மகனுக்கு மணம் செய்து வைத்தான். துர்க்கா பெயருக்கு ஏற்ற படி பத்திரகாளி. அடங்காப்பிடாரி. மகாவாயாடி. தன் கணவன் வேளா வேளைக்கு வயிறு நிறையச் சாப் பிட்டு விட்டு ஒரு வேலையும் செய்யாமல் ஊர் சுற்றி வருவதைக் கண்டு எரிச்சல் அடைந்தாள். இத னால் அவள் தன் கணவனையும் மாம னாரையும் எப்போதும் திட்டி நொறுக்கி வந்தாள்.

கொஞ்ச காலத்திற்குப் பின் மகா ராசன் இறக்கவே மாதவன் பாடு திண் டாட்டமாகியது. துர்க்காவின் வாய் வசை மழை பொழிந்தது. இந்நிலை யில் மாதவனைக் காண அவனது ஆருயிர் நண்பன் ஆனந்தன் வந்தான். மாதவன் தன் மனைவியிடம் விருந்து சாப்பாடு தயாரிக்கச் சொன்னான்.

அவளோ ''உனக்கு வடித்துக் கொட்டுவது போதாது என்று வரும் கண்டவர்களுக்கெல்லாம் விருந்து சாப்பாடு வேறா? முடியாது'' என்றாள்.

அதைக் கேட்ட ஆனந்தன் உடனேயே வீட்டிலிருந்து வெளியே போய் விட்டான். அதைப்பார்த்த மாத வன் தன் மனைவி மீது வெறுப் படைந்து வீடு தனக்கு சுகமளிக்காது என எண்ணி காட்டிற்குச் சென்றான். அதில் அவன் நடந்து கொண்டே இருக்க இருட்டிவிட்டது. அப்போது ஒரு குரல் ''அப்பனே! இனியும் இந்த இருட்டில் போகாதே. போனால் ஆபத்து தான்'' என்றது. மாதவன் குரல் வந்த திசையில் பார்த்த போது அங்கு ஒரு சன்னியாசியைக் கண்டான்.

அவன் அவரருகே போய் விழுந்து வணங்கித் தன் மனைவியின் அடங் காப்பிடாரித்தனத்தையும் துடுக்கான பேச்சையும் பற்றிக் கூறி ''சுவாமி!

அவளோடு நான் வாழ முடியாது. அவள் போக்கை மாற்றுங்கள். அப்படித் தாங்கள் செய்யாவிட்டால் நான் தங்களது சீடனாக இங்கேயே இருந்து விடுகிறேன்'' என்றான்.

அந்த சன்னியாசியும் அவனை எழுப்பிப் பரிவுடன் தடவிக் கொடுத்து தன் கமண்டல நீரைத் தன் கையில் எடுத்து ''துர்க்காவின் அடங்காப் பிடாரித்தனமும் துடுக்குப் பேச்சும் ஒழியட்டும்'' என்று கூறித் தரை மீது தெளித்தார்.

அதன் பிறகு அவர் மாதவனிடம் ''நீ பயப்படாமல் இப்போதே உன் வீட்டிற்குப் போ. உன் மனைவியின் போக்கில் பெருத்த மாறுதலைக் காண்பாய்'' எனக் கூறி அவனை ஆசீர்வதித்து அனுப்பினார்.

மாதவனும் அவர் கூறியபடி அங்கிருந்து தன் வீட்டிற்குச் சென்றான். அவனை எதிர் பார்த்தவள் போல அவன் மனைவி வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தாள். தன் கணவனைக் கண்டதும் அவள் அவனது கால்களில் விழுந்து பணிவுடன் ''என்னை மன்னித்து விடுங்கள். இனி மேல் நீங்கள் சொல்கிறபடியே நடக்கிறேன். வீண் வார்த்தைகளைக் கொட்ட மாட்டேன்'' என்று கூறினாள்.



மாதவனும் மகிழ்ந்து ''உன் மாறுதலுக்குக் காரணம் காட்டிலிருந்த சன்னியாசி கொடுத்த வரங்களே'' என்றான்.

அவளும் ''அப்படியா? அவர் அவ்வளவு சக்தி வாய்ந்தவரா? அப்படியானால் என் உடல் பருமன் குறைந்து நான் அழகாய், நல்ல நிறத்துடன் இருக்குமாறு அவரிடம் வரம் கேட்டு வாங்கி வாருங்கள்'' என்று கெஞ்சினாள்.

மாதவனும் தன் மனைவியின் விருப்பத்தை நிறைவேற்ற காட்டிற்குப் போய் சன்னியாசியைக் கண்டான். அவரும் அவன் கேட்ட வரத்தைக் கொடுக்கவே அவனும் வீட்டிற்குத் திரும்பி வந்தான். தன் மனைவியின் உருவம் அவள் விரும்பியபடி மாறி விட்டது கண்டு மாதவன் ஆச்சரியம் அடைந்தான். இது போல தான் நன்கு சமைக்கவும், நிறையப்பணம் கிடைக்கவும் அடுத்தடுத்து வரங்களை வாங்க மாதவனை சன்னியாசியிடம் துர்க்கா அனுப்பினாள். சன்னியாசியும் மாதவன் கேட்ட வரங்களைக்



கொடுத்து அவனை அனுப்பினார்.

துர்க்காவின் ஆசைக்கு அளவில்லா மல் போயிற்று. அவள் தன் பல விருப் பங்களைக் கூறி அவற்றை வரங் களாகக் கேட்டு வாங்கி வருமாறு தன் கணவனை அனுப்பினாள். ஆனால் மாதவன் காட்டிற்குள் போய் பார்த்த போது அந்த சன்னியாசி எங்கும் தென் படவில்லை. அதனால் சோர்ந்து போய் வீட்டிற்குத் திரும்பும் போது ஒரு கிழவியின் உணவு விடுதியில் தங்கினான்.

அப்போது ஒருவர் ''என்னப்பா மாதவா! இப்போதாவது திருப்தி யுடன் இருக்கிறாயா?'' என்று கேட் டார். மாதவன் திகைத்துப் போய் அவரை உற்றுப்பார்த்து விட்டு ''சுவாமி! தாங்களா? தங்களது தாடி என்ன ஆயிற்று? அதனால் தங்களை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை தான்'' என்று கூறிப் பணிவுடன் வணங்கினான்.

அவரும் ''என் பெயர் ஞானமணி. நானும் என் மனைவியின் அடங்காப் பிடாரித்தனத்தையும், வாய்ச்சொல் கடுமையையும் சகித்துக் கொள்ள முடியாது போனதால் தான் சன்னியாசி யாகிக் கடுந்தவம் புரிந்தேன். அந்தத் தவம் பயனளித்தது என்பதை நான் உனக்குக் கொடுத்த வரங்களால் தெரிந்து கொண்டேன். உன் வாழ்க்கை சீர்திருந்தியது போல என் குடும்ப வாழ்க்கையும் சீரடையும் என்று எண்ணியே நான் என் வீட்டிற்குப் போய்க்கொண்டிருக்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட மாதவன் ''அடடா! என் மனைவியின் மேலும் சில விருப் பங்களை வரங்களாகப் பெற்றுக் கொண்டு போகலாம் என்று வந்தேன். இன்னமும் கொஞ்ச காலத்திற்கு நீங்கள் சன்னியாசியாக இருந்திருக்கக் கூடாதா? எனக்கு வேண்டிய வரங் களை எல்லாம் வாங்கிக் கொண் டிருப்பேனே. உங்களைக் காட்டில் காணவில்லையே என எண்ணி நான் என் ஊருக்குத் திரும்பி சென்று கொண்டிருக்கிறேன். இனிமேல் நீங்கள் வரம் கொடுத்தால் பலிக்குமோ அல்லது பலிக்காதோ என்று சந்தேகப் படுகிறேன்'' என்றான்.

அது கேட்டு சன்னியாசி பலமாகச் சிரித்து ''மாதவா! ஆசைகளை வளர்த்து கொண்டே போகாமல்

உழைப்பின் மீது தான் நம்பிக்கை வைக்க வேண்டும். உழைத்துச் சம்பாதித்து உண்டு வாழ்வதில் தான் இன்பம் உள்ளது. இருப்பதைக் கொண்டு திருப்தி அடை. பிறகு எப்போதாவது சந்திப்போம்'' எனக் கூறி விட்டு தன் ஊரை நோக்கிச் சென்றார். மாதவனும் தன் ஊருக்குச் சென்றான்.

தன் ஊரை சன்னியாசி அடைந்த போது நன்கு இருட்டிவிட்டது. அவர் தன் வீட்டு ஜன்னல் திறந்திருப்பது கண்டு உள்ளே என்ன நடக்கிறது என்று பார்த்தார்.

அவரது மனைவி மரகதமணி தன் பத்து வயது மகளையும் எட்டு வயது மகனையும் கடிந்து கொண்டு ''உங்கள் தாத்தா ஏழு தலை முறைக்கு வேண்டிய சொத்தை வைத்து விட்டுப் போயிருக்கிறார். ஆனால் அதை அனுபவித்துக் காப்பாற்றி வர உங்கள் தந்தை இல்லை. அதனால் உங்களை நன்றாகப்படிக்க வைக்க முடியவில்லை. நீங்கள் பெரியவர்களான பின் உங்கள் திருமணம், நல்வாழ்வு என்றெல்லாம் அமைக்கும் பெரும் பொறுப்பு என் தலை மீது விழுந்து விட்டது. இப்படி எல்லாம் என்னைக் கஷ்டப்படுத்தி உங்கள் தந்தை சன்னியாசியாகி விட்டாராம்! இது மகாபாவமில்லையா? பாவங்களைச் செய்து விட்டு தம் மனைவி மக்களைத் தவிக்கவிட்டு எல்லா கணவன்களும் சன்னியாசிகளாகி விடுவார்களேயானால் அவர்களது மனைவிகளுக்கு என்ன வழி? கிணற்றிலோ, குளம், குட்டைகளிலோ விழுந்து சாக வேண்டியது தான்'' என்றாள்.



அதைக் கேட்ட அவளது மகளும் மகனும் ''அம்மா! இப்படி எதையாவது செய்துவிடாதீர்கள். நீங்கள் இல்லாவிட்டால் எங்கள் கதி என்ன ஆகும்?'' என்று கண்கலங்கியவாறே கேட்டார்கள்.

அதற்கு மரகதமணி ''இது உங்கள் தந்தைக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஏராளமான செல்வமும், மனைவியும், மக்களும் இருந்தும் ஒருவன் அவர்களைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் சன்னியாசியாகிப் போய் எங்கோ உட்கார்ந்து விட்டால் அவன் தன் கடமையை மறந்து விட்டான் என்பது தானே பொருள்'' என்று கத்தினாள்.

அதன் பிறகு ஏதோ ஒரு உலோகப்

பொருள் விட்டெறியப்பட்டு பலத்த சத்தம் கேட்டது. அப்போது சன்னி யாசி வீட்டு வாசல் கதவருகே போய் அதைத் தட்டி ''மரகதம்! நான் காட்டி லிருந்து வீட்டிற்கு வந்து விட்டேன். கதவைத் திற'' என்று கூறினார்.

வேதாளம் இந்தக் கதையைச் சொல்லி ''மன்னா! மாதவன் கஷ்டப் படாமலேயே தன் மனைவியின் அடங்காப்பிடாரித்தனத்தையும் வாய்த்துடுக்கையும் போக்கி விட்டு சுகவாழ்வு வாழ்ந்தானே. இதற்கு சன்னியாசி தானே காரணம்? ஆனால் கடுந்தவம் செய்த பின்னும் அந்த சன்னியாசியால் தன் மனைவி மரகதத் தின் வாய்த்துடுக்கை ஏன் மாற்ற முடியவில்லை? இதற்குக் காரணம் என்ன? இக்கேள்விக்கு நீ சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறா விட் டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகப் போய் விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சன்னியாசி ஆரம் பத்தில் வீட்டை விட்டு விரக்தியால் தான் வெளியேறினார். கடுந்தவத்தின் பயனாக அவருக்கு அபூர்வசக்தி கிடைத்தது. அப்படிப்பட்ட சக்தி தனக்கு உள்ளதை அவர் மாதவன் கேட்ட வரங்கள் பலித்ததால் கண்டு கொண்டார். அதனால் அவர் தான் தவம் செய்தது போதும் என எண்ணித் தன் வீட்டிற்குத் திரும்பி வந்தார். அப்போதும் தன் மனைவியின் வாய்த் துடுக்கு போகாததைக் கண்டார். அது மறையாததற்குக் காரணம் அவர் தானடைந்த சந்தியை எல்லாம் மாத வனுக்குக் கொடுத்த வரங்களால் போக்கடித்து விட்டதே. மேலும் மரகதமணி கடைசியில் கூறிய தற் கொலையைக் கேட்டபின் அவர் வீட்டில் இருந்து எல்லாப் பொறுப்பு களையும் ஏற்று வாழ்க்கை நடத்த முடிவு செய்து கொண்டார்'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# பாரதப் பண்பாடு- வரலாறு

**ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.**
**பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு**

## 20. இயற்கையில் தெய்வீகத் தன்மையைக் காணல்



சேகரும், சியாமளாவும் தம் தாத்தா பேராசிரியர் சோமநாதருடன் பொழுது போக்காக சுற்றுலா இடம் ஒன்றை அடைந்தார்கள். அது ஓர் ஏரிக்கரையில் அமைந்திருந்தது. ஏரியின் மறுகரையில் அடர்ந்த காடு ஒன்று, மலை மீது இருந்தது. இந்த மூவருடன் வேறுசில சிறுவர் சிறுமியரும் வந்திருந்தனர்.

வெயில் குறைந்து 'சில்' லென்ற காற்று வீசிக் கொண்டிருந்தது. செடிகளிலும் மரங்களிலும் வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கின. சூரியன் மறைந்து, மறைந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தான். இதையெல்லாம் கண்ட சியாமளா ''ஆகா! என்ன அழகாக இங்கே காட்சியைக் காண்கிறோம். இவற்றின் தெய்வீகத் தன்மை தான் என்னே!'' என்று வியந்து கூறினாள்.

சோமநாதரும் ''ஆம். தெய்வீகம் என்பது எவ்வளவு அழகான சொல். நம் முன்னோர்கள் இயற்கையை தெய்வமாகத் தான் கருதினார்கள். இம்மாதிரியான எண்ணம் நம் மனதைப் புல்லரிக்கச் செய்கிறது. இதனால் தான் நம் முன்னோர்கள் இமய மலையை தெய்வீகமானதாகக் கருதினார்கள். அந்தப் பனிமலையில் ஆலயங்களை அமைத்தார்கள். இமய மலைச் சிகரங்களை வழிபட்டார்கள். கைலாய மலையை சிவபிரானின்



கடவுளுக்குத் தான் தெரியும்'' என்று பெரு மூச்சுவிட்டவாறே கூறினார். அப்போது சேகர் ''அமர்நாத் ஆலயம் பற்றிக் கூறுகிறீர்களா?'' என்று கேட்டான்.

அவரும் ''மனிதன் இயற்கையை வழிபடுவதற்குத் தக்க உதாரணமாக அமர்நாத்தைக் கூறலாம். அமர்நாத் கடல் மட்டத்திலிருந்து 4000 கி.மீ உயரத்தில் அதாவது 13000 அடி உயரத் திற்கு மேல் உள்ளது. தொன்று தொட்டு இது புனிதத் தலமாகக் கருதப் பட்டு வருகிறது. ஓர் ஆடு மேய்ப் பவன் தன் ஆட்டைக் காணாமல் அதைத் தேடிக் கொண்டு இப்பகுதி யில் அலைந்தானாம்.

அப்போது ஒரு குகையைக் கண்டு அதற்குள் செல்லவே, அங்கு பனிக் கட்டியாலான சிவலிங்கத்தைக் கண் டானாம். அது வளர்பிறை நாட்களில் பெரிதாகி தேய்பிறை நாட்களில் உரு வில் குறைந்தும் வந்ததாம்'' எனக் கூறி மேலும் தொடர்ந்தார்.

''அந்த ஆடுமேய்ப்பவன் ஓடிப் போய், தான் கண்டதைக் கஷ்மீர் மன்னனிடம் கூறினான். அங்கிருந்த பண்டிதர்கள் அத்தகைய குகை இருப் பதைக் கேட்டிருந்தார்கள். ஆனால் அது எங்கே இருக்கிறது என்பதை அறியவில்லை. அதைப் பற்றிய புராணக்கதையை மட்டும் அவர்கள் எல்லோருக்கும் கூறி வந்தார்கள்.

சிவபிரான் அணிந்திருந்த மண்டை யோடுகளாலான மாலை பற்றி அறிய பார்வதி தேவி விரும்பினாளாம். தன் கணவனிடம் அவள் அது பற்றிக்

உறைவிடமாக அவர்கள் எண்ணி வந்தார்கள்'' என்றார்.

''மலைகளை தெய்வீகம் எனப் போற்றுகிறார்களென்றாலும், சில மலைகளில் கொள்ளைக்காரர்களும், திருடர்களும் மறைந்திருந்து மக் களைத் துன்புறுத்துகிறார்களே. இது மகாப்பாவம் தானே. அதுவும் புனித ஆலயங்களுக்குச் செல்லும் பக்தர் களை இவர்கள் தாக்கித் துன்புறுத்து வது கொடூரம் தானே. இது போன்ற கொடூரம் இந்த ஆண்டு ஜூலை மாதத்தில் அமர்நாத்திற்குச் சென்ற யாத்திரீகர்களுக்கு இழைக்கப் பட்டது'' என்று சேகரின் நண்பன் ஒருவன் கூறினான்.

சோமநாதரும் ''ஆம். நம் மனிதர் களிடையே இம்மாதிரியான சில பாத கர்களும் இருக்கிறார்கள். அவர்கள் என்று திருந்துவார்கள் என்பது அந்தக்

கேட்கவே, அவரும் அவையாவும் அவளது பூர்வஜென்ம மண்டை ஓடுகள் என்றாராம்.

அப்போது பார்வதி தேவி ''நான் ஏன் ஒவ்வொரு முறையிலும் இறந்து பிறக்கிறேன்? நீங்கள் மட்டும் ஏன் இறக்காமல் சாசுவதமாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

சிவபிரான் அதற்கான ரகசியத்தை அவளுக்குக் கூறச் சம்மதித்து, அதை வேறு யாரும் கேட்டுவிடக் கூடாதே என்பதற்காக, அவளைத் தனிமையான ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றார். அது தான் இந்த அமர்நாத் குகை. சிவ பெருமான் அந்த ரகசியத்தைக் கூறிக் கொண்டிருக்கும் போது பார்வதிதேவி தூங்கி விட்டாளாம். ஆனால் வேறு யாரோ 'உம்' 'உம்' என்று சொன்னாராம். சிவனார் யாரென்று பார்த்தபோது, ஒரு கிளிக் குஞ்சு பறந்து வியாச முனிவரது மனைவியின் கர்ப்பப் பைக்குள் புகுந்ததாம். வியாசரின் மனைவிக்குப் பிறந்தவர் தாம் சுகர் என்பவர். 'சுக' என்றால் கிளி என்பது பொருள்.

ஆடு மேய்ப்பவன் வழிகாட்ட, காஷ்மீர மன்னரும், அவருடன் சில பிரபுக்களும் அந்த குகைக்குச் சென்றார்கள். இது ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்தது. அப்போது முதல் ஆண்டு தோறும் பனி சிவ லிங்கத்தை தரிசிக்க, அமர்நாத் குகைக்கு பக்தர்கள் சென்று வருகிறார்கள்.

ஆண்டு தோறும், ஒரு நல்ல நாளில் பக்தர்கள் பஹல்காமிலிருந்து புறப்பட்டு மலைகள் காடுகள் எனக் கடந்து, இயற்கை அளிக்கும் குகையிலுள்ள பனிக்கட்டியாலான சிவலிங்கத்தை தரிசித்துப் பரவசப்படுகிறார்கள்.'' இவ்வாறு சோமநாதர் கூறி முடித்ததும் யாவரும், ''இயற்கை அளிக்கும் பேரின்பத்தை நாம் அனுபவிப்பது ஒரு அரிய வாய்ப்பு தான்'' என்று கூறி மகிழ்ந்தார்கள்.



குஜராத்திய கிராமியக்கதை

# அறிவுரை விற்ற சிறுவன்

## குஜராத்: அன்றும் இன்றும்

குஜராத் என்பது குஜ்ஜராஷ்டிரம் என்ற பெயர் மருவி வந்தது. கி. பி 3ம் நூற்றாண்டில் ஹுணர்களின் படையெடுப்பால் இடம் பெயர்ந்து வந்த குஜ்ஜார் என்ற கூட்டத்தவர் அமைத்த நாடு அது. ஆனால் குஜராத்தின் வரலாறு மிகவும் பழைமையானது. கி.மு 2000க்கும் முந்தையது. ரான் ஆஃப் கச் எனத் தற்போது அழைக்கப்படும் பகுதியில் ஹரப்பா நாகரீகம் இருந்த தடயங்கள் கிடைத்துள்ளன. சௌராஷ்டிராவின் மேற்குப் பகுதியிலுள்ள துவாரகைக்கு ஸ்ரீகிருஷ்ணர் மதுராபுரியில் இருந்து சென்று குடியேறினாராம்.

பம்பாய் மாகாண சீரமைப்பிற்கான 1960ம் ஆண்டு சட்டப்படி 1960 ஜுலை முதல் தேதியன்று குஜராத் மாநிலம் அமைக்கப்பட்டது. மேற்கே அரபிக் கடலும் வடக்கே பாகிஸ்தானும் வடகிழக்கே ராஜஸ்தானும் தென்கிழக்கில் மத்தியப் பிரதேசமும் தெற்கே மகாராஷ்டிரமும் இதன் எல்லைகளாக உள்ளன.

இதன் பரப்பளவு 196,000 சதுர கி.மீ. இது இந்தியாவின் பரப்பளவில் 601 சதவீதமாம். இதன் மக்கள் தொகை 2001ல் எடுத்தபடி 50, 596, 992. மக்கள் தொகையில் நம் நாட்டில் பத்தாவது இடத்தையும் பரப்பளவில் ஒன்பதாவது இடத்தையும் பெறுகிறது.

வெகு காலத்திற்கு முன் குஜராத்தின் ஒரு சிறு நாட்டில் ஒரு சிறுவன் இருந்தான். அவன் பெயர் விபுல். அவன் மிகச் சிறியவனாக இருந்த போதே அவனது தந்தை இறந்து விட்டார். அவனுக்கு சொத்தோ, சுகமோ எதுவும் அவர் வைத்து விட்டுப் போக வில்லை. ஆனால் அச் சிறுவன் தன் தந்தை வேலை செய்த போதெல்லாம் அவர் அதை எப்படிச் செய்கிறார் என்று கவனித்து வந்தான்.



## கைவினைப் பொருள்கள்



குஜராத்தின் வண்ண மிகு கைவினைப் பொருட்கள் பெயர் பெற்றவை. இவற்றில் பந்தினி எனப்படும் வண்ணச் சேர்க்கை பிரபலமானது. குஜராத் மாநிலத்துணிகளில் பல ரகங்கள் புகழ் பெற்றவை. படோலா, சூரத் சரிகை, மஷ்ரு என்பன அவற்றில் ஒரு சில.

எம்ப்ராய்டரி எனப்படும் துணியில் பூவேலை பிரபலமானது. சலக்சலையா காங்கிலி, டிக்கி, கடோரி என்பன அவற்றில் சில. கட்ச் பகுதி துணிகளில் பளபளக்கும் சிறு கண்ணாடித் துண்டுகளை வைத்துத் தைப்பதற்குப் பெயர் பெற்றது.



ஒரு நாள் அவனுக்கு ஓர் அபூர்வ யோசனை தோன்றியது. அவன் கொஞ்சம் பணம் கடன் வாங்கி, ஒரு சிறுகடையைக் கடைத் தெருவில் ஆரம்பித்தான். அதில் உட்கார்ந்து கொண்டு சில வெள்ளைத்தாள்களை யும், ஒரு பேனாவையும், ஒரு மைக் கூட்டையும் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டான்.

அவன் தன் கடையின் முன்னால் ஒரு பலகையில் 'இங்கு அறிவுரை கள் விற்கப்படும்' என்று எழுதி வைத் தான். மற்ற கடைக்காரர்கள் தம் கடைச் சரக்குகள் உயர்தரமானவை என்று உரக்கக் கூவி வாடிக்கையாளர் களைத் தம் கடைகளுக்கு இழுக்க முயன் றனர். கடைகளில் பந்தேஜ், சரிகை படோலா ஆகிய ரகத்துணிகள் இருந் தன. மெழுகு பொம்மைகள், அரக்கு பொம்மைகள், தொட்டில்கள், நாற் காலிகள் என மரச்சாமான்களும் வைக்கப்பட்டிருந்தன. உணவுக் கடைகளில் கமம், டோக்லா, பதாரா, காண் பவி, ஜிலேபி, தூத்பாக், ஸ்ரீகண்ட் போன்ற இனிப்பு, கார வகைத் திண்பண்டங்களும் இருந்தன.

காய்கறிகள், தானியங்கள், வாசனை திரவியங்கள் முதலியனவும் வாடிக்கையாளர்களைக் கவரும் விதத் தில் வைக்கப்பட்டிருந்தன. இவ்வள வுக்கும் மத்தியில் 'அறிவுரைகள் விற்கப்படும்' என ஒரு பலகையில் எழுதி வைத்துவிட்டு கடையில் உட் கார்ந்திருக்கும் இந்த அதிபுத்திசாலி யார் என்றே எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள். எல்லோரும் அவனை ஒரு பைத்தியக்காரன் என எண்ணி அந்தக் கடைக்கு வராமலே இருந் தனர். விபுல் அது பற்றிக்கவலைப் படவில்லை. அவனும் அறிவுரைகள் விற்கப்படும்' என உரக்கக் கூவிக் கொண்டே இருந்தான்.

புத்தூநாத் என்ற ஒரு பணக்கார வாலிபன் அதைக் கேட்டு விபுலிடம் ''இது என்ன?'' என்று கேட்டான். அந்த வாலிபனை அவனது தந்தை முட்டாள் என்று தான் திட்டுவது வழக்கம். விபுல் அறிவுரை என்றால் என்ன என்று அவனுக்கு விளக்கினான். அதைக் கேட்ட புத்தூநாத் அறிவுரையை வாங்கிக் கொண்டு போனால் அதைக் கண்டு தன் தந்தை மகிழ்ந்து போவார் என்று எண்ணி ''எனக்கு ஒரு முழம் அறிவுரை கொடு'' என்று கேட்டான்.

விபுலும் ''அறிவுரைகள் முழம் போட்டோ அல்லது தராசில் நிறுத்தோ விற்கப்படும் பொருளல்ல'' எனவே, புத்தூநாத்தும் ''அது எப்படிப்பட்டதாக இருந்தாலும் எனக்குக் கொடு'' என்றான். விபுலும் ஒரு துண்டுக் காகிதத்தை எடுத்து அதில் ''இருவர் சண்டை போடும் போது, அந்த இடத்தில் நின்று வேடிக்கை பார்க்காதே'' என்று எழுதிக் கொடுத்தான். புத்தூநாத்தும் விபுல் கேட்ட பணத்தைக் கொடுத்து விட்டு, அந்தக் காகிதத் துண்டை வாங்கி மடித்து பத்திரமாகத் தான் அணிந்திருந்த தலைப்பாகையில் சொருகிக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

தன் மகன் வாங்கி வந்த அறிவுரைக் காகிதத்துண்டைப் பார்த்த அவனது தந்தை ''அட முட்டாளே! யாரோ ஒருவன் உன்னை நன்றாக ஏமாற்றி விட்டான். அறிவுரை விற்கப்படும் பொருளல்ல என்பது கூட உனக்குத் தெரியவில்லையா? வா, உனக்கு இதை விற்றவனை எனக்குக் காட்டு'' என்று கோபத்தோடு கூறி, அவனைக் கடைத்தெருவிற்கு இழுத்துச் சென்றார். புத்தூநாத் தன் தந்தையை விபுலின் கடை முன் கொண்டு போய் நிறுத்தினான். அவரும் ''ஏய் மோசக்காரா! என் மகன் முட்டாள் எனக்

## திருவிழாக்களும் பண்டிகைகளும்

குஜராத் அதன் பல பண்டிகைகளுக்கும், விழாக்களுக்கும் புகழ் பெற்றது. இவற்றில் பட்டம் பறக்க விடும் விழா சிறப்பானது. இது மகர சங்கிராந்தியன்று (ஜனவரி 14) அகமதாபாதில் ஆண்டு தோறும் நடை பெறுகிறது. இங்கு இப் போட்டியைக் காண உலக முழுவதிலிருந்தும் மக்கள் வருகிறார்கள்.

மற்றொரு முக்கியமான விழா தர்நேதரில் நடக்கும் திரிநேதேஷ்வர் மகா தேவ் விழா. இங்கு தான் மகாபாரதத்தில் கூறப்பட்ட துரௌபதியின் சுயம்வரம் நடந்ததாகக் கருதப்படுகிறது.

ராஜஸ்தான் புஷ்கர் விழாவின் போது கால்நடைகள் சந்தை நடப்பது போல, இம்மாநிலத்தில் வௌதா வில் சபர்மதி நதியும், வத்ரக் நதியும் கூடும் இடத்தில் அம்மாதிரி சந்தை நடை பெறுகிறது. இங்கு அப்போது கழுதைகளும் விற்கப்படுகின்றன.



கூறி, புத்தூநாத்தின் தந்தை விபுலிட மிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு சென்றார்.

அந்நாட்டு மன்னனுக்கு ரூபமதி என்றும், தாராமதி என்றும் இரு மனைவிகள் இருந்தனர். அவர்களிடையே எப்பொழுதும், எதற்கும் போட்டி. அவர்களது பணிப் பெண்களும் அவர்களைப் போலவே சண்டை போடுபவர்கள். ஒரு நாள், புத்தூநாத் கடைத்தெருவிற்கு வந்த போது, அந்த இரு பணிப் பெண்களும் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். ஒரு காய்கறிக் கடையில் ஒரே காயை வாங்கவே, இருவரும் சண்டை போட்டுக் கொண்டும், அடித்துக் கொண்டும் இருந்தார்கள். இதைப் புத்தூநாத் ஓர் ஓரமாக நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அதைக் கவனித்த பணிப்பெண்களும், ''நீ தான் எங்கள் சண்டையைக் கண்ட தால் சாட்சி கூற வரவேண்டும்'' என்றார்கள். இரு பணிப்பெண்களும் தம் சண்டையைப் பற்றி, தம் ராணிகளிடம் கூற, அவர்கள் மன்னனிடம் புகார் செய்தார்கள்.

மன்னனும் விசாரணையை நடத்தலானான். புத்தூநாத் சாட்சியாக அழைக்கப்பட்டான். அவனோ தான் சிக்கலில் மாட்டிக் கொண்டதை

கண்டு, அவனிடமிருந்த பணத்தைப் பறித்துக் கொண்டாயா? மன்னரிடம் புகார் செய்து உனக்கு தண்டனை வாங்கிக் கொடுக்கிறேன் பார்'' என்று கத்தினார்.

விபுலும் ''ஐயா! கோபப்படாதீர்கள். என் சரக்கு பிடிக்கவில்லை என்றால் அதை திருப்பிக் கொடுத்து விட்டு, உங்கள் பணத்தை வாங்கிக் கொண்டு போங்கள்'' என்றான். புத்தூநாத்தின் தந்தையும் விபுல் கொடுத்த காகிதத்துண்டை அவன் முன் விட்டெறிந்து ''எடு பணத்தை'' என்று உறுமினார்.

விபுலோ, ''நான் விற்றது இது வல்ல. இந்தக் கருத்தை ஏற்பதில்லை என உங்கள் மகன் எனக்கு வாக்களிக்க வேண்டும். அப்போது தான் நான் பணத்தைத் திருப்பிக் கொடுப்பேன்'' என்றான்.

இதற்குள் அந்தக் கடைமுன் கூட்டம் கூடிவிட்டது. கூட்டத்தவரும் 'விபுல் கூறுவதே சரி' என்றனர். தன் மகன் அவ்வாறே செய்வானெனக்

எண்ணி, என்ன செய்யலாம் என நினைத்தான்.

அவன் தன் தந்தையிடம் விஷயத்தைக் கூறவே, அவரும் ''இதற்கு விபுலிடம் யோசனை கேட்கலாம்'', என்று கூறித் தன் மகனை அழைத்துக் கொண்டு விபுலின் கடைக்குச் சென்றார்.

விபுலும் தான் யோசனை கூறுவதாயும், அதற்கு ஐந்நூறு ரூபாய் தர வேண்டும் என்றான். புத்தூநாத்தின்



தந்தையும் வேறு வழி தோன்றாமல் அதற்கு இணங்கினார். விபுலும் ''நீ ஒரு பைத்தியக் காரனைப் போல் நடி. உன்னை மன்னன் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுவான்'', என்றான். விபுலுக்கு ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டு, புத்தூநாத்தை அவனது தந்தை அழைத்துச் சென்றார். அவனும் விபுல் கூறியபடியே மன்னன் முன் பைத்தியக்காரனாக நடித்து, சிக்கலிலிருந்து விடுபட்டான்.

ஆனால் அவனது தந்தையோ மன்னன் உண்மையைத் தெரிந்து கொண்டால் என்னவாகுமோ எனப் பயப்பட்டு, மீண்டும் யோசனை கேட்க விபுலிடம் சென்றார். விபுல் அவரிடமிருந்து மேலும் ஐந்நூறு ரூபாய் வாங்கிக் கொண்டு ஒரு கதையைச் சொல்லி ''இதை மன்னனிடம் கூறினால் உங்களை விட்டு விடுவான்'' என்றான்.

புத்தூநாத்தின் தந்தை எதிர்ப்பார்த்தபடியே மன்னனின் வீரர்கள் வந்து அவரைப் பிடித்துக் கொண்டு போய் மன்னன் முன் நிறுத்தினார்கள்.

மன்னன் விசாரிக்கும் போது புத்தூநாத்தின் தந்தை விபுல் கூறச் சொன்ன கதையைச் சொல்லவே, அதைக் கேட்ட மன்னன் விழுந்து விழுந்து சிரித்தான். பிறகு அவரிடம் உமக்கு இந்தக் கதையை யார் கூறியது எனக் கேட்கவே அவர் விபுலைப் பற்றிக் கூறினார். மன்னன் உடனே விபுலை அழைத்து வரும்படிக் கட்டளை இட்டான். விபுல் வந்ததும் மன்னன் ''நீ அறிவுரைகளை விற்கிறாயாமே? எனக்கும் ஒன்றை விற்கிறாயா?'' என்று கேட்டான். விபுலும் ''ஆகா! கொடுக் கிறேன். ஆனால் அதன் விலை ஐயாயிரம் ரூபாய்'' என்றான்.

மன்னனும் சிரித்தவாறே ஐயாயிரம் ரூபாய் கொடுத்து அவன் எழுதிக் கொடுத்த காகிதத்துண்டை வாங்கிக் கொண்டான். அதில் ''எதைச் செய்வதானாலும் நன்கு யோசித்து விட்டே செய்'' என்றிருந்தது.

மன்னனுக்கு அந்த அறிவுரை மிகவும் பிடித்து போயிற்று. அதை

அரண்மனையில் எல்லா இடங்களி லும் எழுதி வைத்தான். ஒரு முறை மன்னன் நோயுற்றுப்படுத்த போது ராணி ரூபமதியும் மந்திரியும் சதி செய்து மன்னனைக் கொன்று விட்டு ஆட்சியைக் கைப்பற்ற எண்ணினார் கள். அதனால் மன்னனுக்கு மருந்து கொடுக்கும் வைத்தியனுக்கு லஞ்சம் கொடுத்து மருந்தில் விஷத்தைக் கலந்து கொடுக்கும்படிச் சொன்னார் கள். வைத்தியன் விஷம் கலந்த மருந்தை மன்னனிடம் கொடுத்த போது மன்னன் அதைக் கையில் வைத்துக்கொண்டு ''எதைச் செய்வ தானாலும் நன்கு யோசித்துவிட்டே செய்'' என்று தன் முன் எழுதப் பட்டிருந்த அறிவுரையை உரக்கப் படித்தான்.

மன்னனுக்குத் தன் துரோகச் செயல் தெரிந்து விட்டதால் அவ்வாறு கூறி னார் என வைத்தியன் எண்ணி மன்ன னின் கால்களில் விழுந்து ''அரசே! என்னை மன்னித்து விடுங்கள். நான் பிள்ளை குட்டிக்காரன். பணத்தாசை யால் தங்களுக்கு துரோகம் செய்து விட்டேன். ராணி ரூபமதியும், மந்திரி யும் என்னிடம் வந்து தங்களுக்கு நான் கொடுக்கும் மருந்தில் விஷம் கலந்து கொடுக்க வேண்டுமென்றும் அதற் காக எனக்கு லட்சம் ரூபாய் கொடுப்ப தாகவும் ஆசை காட்டினார்கள். பணத் தாசையால் அதற்குச் சம்மதித் தேன்'' என்று கூறித்தன்னை மன்னிக்கு மாறு வேண்டினான்.

மன்னன் உடனேயே ரூப மதி யையும் மந்திரியையும் கைது செய்து சிறையில் அடைத்தான். தனக்கு நல்ல அறிவுரைத்தந்த விபுலை அழைத்து வரச் சொல்லி, அவனை தன் மந்திரியாக்கிக் கொண்டு, அவனது அறிவுரை களைக் கேட்டு நீண்டகாலம் நல்ல விதமாய் ஆட்சி புரிந்து வந்தான்.



## சுற்றுலா இடங்கள்

குஜராத்தில் கிருஷ்ணபகவான் வசித்த இடமாகக் கருதப்படும் துவா ரகை பார்க்கத்தக்கது. இப்போது துவா ரகை உள்ள இடத்தில் ஐந்து முறை துவா ரகை இருந்து கடலால் அழிக்கப் பட்ட தாம். துவாரகையிலுள்ள ஆலயம் 2500 ஆண்டுகளுக்கு முன் கட்டப் பட்டதாம்.

கட்ச் பகுதியிலுள்ள லோதல் ஹரப்பா நாகரீகத்தடயங்களைக் கொண்டுள்ளது. இது இந்தியாவிலே வரலாற்றுப்புகழ் பெற்ற மிகப் பழைய இடமாகும்.

# கதக்களி

## ஒரு வகை இந்திய நடனம்



தேவ, தேவியர்கள், பூதங்கள், பிசாசுகள் என்பன மிக வேகமாகச் சுழன்று வருவதை மேடையில் அதிக வெளிச்சமே இல்லாமல் பித்தளைக் குத்துவிளக்கின் வெளிச்சத்தில் காணலாம். இந்த வேஷங்களை அணிபவர்கள் பல கண்கவர் வண்ணங்களைப் பூசிக் கொண்டு மேடைக்கு வந்து நடனம் புரிகிறார்கள்.

தென் இந்தியாவில் கேரளத்தில் ஆடப்படும் ஒரு வகை நடனமே கதக்களி எனப்படுவது. கதையை கண்டும், கேட்டும் மகிழக்கூடிய விதத்தில் அமையும், நடன நாடகம் கதக்களி என்று கூறப்படுகிறது. 300 ஆண்டுகளாக இந்த அபூர்வக் கலை தழைத்தோங்கி வருகிறது. இதன் பெரும் பகுதியும், இசை அமைப்பும் கேரளாவில் 9வது நூற்றாண்டில் தோன்றிய கூடியாட்டத்தின் அடிப்படையில் அமைக்கப்படுகின்றன. ஐக்கிய நாடுகள் பொருளாதார சமுதாயக் கலாசார அமைப்பு இதற்கு அங்கீகாரம் அளித்துள்ளது.



இந்நடனங்களுக்கு பொதுவாக நம் புராணக் கதைகளே பயன்படுத்தப் படுகின்றன. கதக்களி நடன நாடகத்தில் நடிகர்கள் ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. கதையை ஒரு பக்கத்தில் இருந்து பாடலாகப் பாடுகிறார்கள். அதற்கேற்ப நடனம் ஆடுபவர்கள் கைகளால் அபிநயம் பிடிக்கிறார்கள். முகத்திலும் கண்களின் அசைவிலும் அவர்கள் முத்திரைகளால் உணர்ச்சிகளை வெளிப்படுத்துகிறார்கள்.

இந்த முத்திரைகள் 700. இவை 24 விதத்தில் சேர்க்கப் படுகின்றன. திறமை மிக்க நடனக்கலைஞர்கள் தம் கண்களை 17 விதங்களில் அசைத்துக் காட்டுகிறார்கள். புருவங்களை எட்டு விதமாயும் கண் இமைகளை எட்டு விதமாயும் ஆச்சரியப் படும் விதத்தில் அசைத்துக் காட்டுகிறார்கள். இது வரை ஆண்கள் மட்டுமே நடனக் கலைஞர்களாக இருந்து வருகிறார்கள். இவர்களே பெண் வேடங்களையும் அணிகிறார்கள்.

### முக அலங்காரம்

நடனக் கலைஞர்கள் தங்கள் உதடுகளையும், கண் இமைகளையும், புருவங்களையும் வண்ணங்களால் தீட்டி முகத்திலும் சாயம் பூசிக் கொள்கிறார்கள். கதாநாயகர்கள்,





வில்லன்கள், கதாநாயகனை எதிர்ப்பவர்கள், சாது சன்னியாசிகள், ராஜாக்கள், பெண்கள் என ஒவ்வொன்றிற்கும் தனித்தனி அலங்காரமும் உடைகளும் உள்ளன. இவ்வாறு வண்ணங்கள் பூசநான்கு அல்லது ஐந்து மணி நேரம் பிடிக்கும்.

பச்சை நிறம் நல்லதைக்காட்டவும், சிவப்பு வீரத்தையும், கருப்பு கெட்டதையும், மஞ்சள் ஆச்சரியத்தையும், வெள்ளை நிறம் தூய்மையையும் காட்டுகின்றன. இவற்றை விதவிதமாய்ச் சேர்ந்து கண்கவர் நிகழ்ச்சியாக கதக்களியை அமைக்கிறார்கள். கண்களுக்கு அஞ்சனமை தடவப்படுகிறது சுண்டப்பூ விதைகள் கண்களில் வைக்கப்பட்டு ஒளி மிக்கதாய் செய்யப்படுகின்றன. இந்த வண்ணப்பூச்சுகளை நடனக் கலைஞர்களைப் படுக்க வைத்து செய்கிறார்கள்.



கதக்களி நடனக் கலைஞர்கள் வேஷம் போட்டுக் கொள்ள இயற்கை வண்ணங்களையே பயன்படுத்துகிறார்கள். இது எப்படி என்று கேட்கிறீர்களா? வெள்ளை நிறம் சுண்ணாம்பிலிருந்தும் சிவப்பு நிறம் மஞ்சள் பொடியையும் சுண்ணாம்பையும் கலப்பதாலும். பச்சை நிற இலைகளை அரைத்து சுண்ணாம்பில் கலந்து பச்சை நிறத்தையும், தேங்காய் ஓடுகளைக் கருக்கி தேங்காய் எண்ணெயில் கலந்து கருப்பு நிறத்தையும், மஞ்சள் கிழங்கைப் பொடி செய்து மஞ்சள் நிறத்தையும் அடைகிறார்கள்.



ஆரம்ப காலத்தில் இந்த நடன நாடகங்கள் ஆலயங்களில் தான் நடந்தன. இரவில் வெகு நேரம் கழித்து ஆரம்பித்து விடியும் போது தான் இதை முடிப்பார்களாம். செருத்துருத்தியில் கேரளகலாமண்டலம் நிறுவப்பட்ட பின் மகாகவி வள்ளத்தோள் நாராயண மேனன் கதக்களிக்குப் புது மெருகு கொடுத்தார். இப்போது இவை அரங்குகளில் மாலை வேளைகளில் நடத்தப் படுகின்றன. பைபிள்கதைகள்கூட (மேரி மேக்தெலென் போன்றவை) இந்த நடன நாடகங்களில் சேர்க்கப்படுகின்றன.

# கருத்துகள் பலவிதம்

ஸூஃபி துறவிகள் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். இஸ்லாமியர்களில் ஸூஃபிகள் என்று ஒரு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அன்புப் பாதையையும், உலக சகோதரத்துவத்தையும், வலியுறுத்தி அறிவுரைகள் கூறி வருகிறார்கள். உலகில் ஒரு கருத்தை ஏற்க எவ்வளவோ எதிர்ப்புகள் தோன்றுவதை நாம் கண்டே வருகிறோம். எனவே ஸூஃபிகளின் கருத்திற்கு எதிர்ப்பு இருப்பது ஆச்சரியப்படத்தக்க விஷயம் அல்லவே.

ஒரு கிராமத்து வாலிபன் ஒருவன் ஸூஃபி துறவிகளைப் பற்றி இழிவாகவே பேசிக் கொண்டு இருந்தான். அதனால் அந்த கிராமத்தவருக்கு அவனைப் பிடிக்கவில்லை. அந்த இளைஞனோ எல்லோரிடமும் வாதம் புரியத்தொடங்கவே, எல்லோரும் அவனைப் பார்த்ததுமே ஒதுங்கலானார்கள்.

அந்த கிராமத்திலிருந்த ஒரு ஸூஃபி துறவி இதையெல்லாம் பார்த்து விட்டு அந்த வாலிபனுக்குப் பாடம் கற்பிக்க நினைத்தார். அவர் தன் கையிலிருந்த மோதிரத்தைக் கழற்றி அவனிடம் கொடுத்து "இதைக் கடைத் தெருவில் 500 ரூபாய்க்கு விற்றுவா" என்றார். அதைத் தன்னால் செய்ய முடியும் என்று கூறி அவன் கடைத் தெருவிற்குச் சென்றான்.

ஆனால் அதை யாரும் வாங்கத் தயாரில்லை ஒரு பெண் அதை வாங்கிப் பார்த்து விட்டு "பத்து ரூபாய்க்குக் கொடுக்கிறாயா?" என்று கேட்டாள்.




அவனால் அதை விற்க முடியாததால் அவன் திரும்பி வந்து அதைத் துறவியிடமே கொடுத்தான். அவர் அதை அவன் இடமே கொடுத்து அவ்வூர் பிரபல நகைக் கடை வியாபாரியிடம் போய் அதைக் காட்டி அதன் மதிப்பு என்ன என்று கேட்டு வரச் சொன்னார். அந்த வியாபாரி அதன் மதிப்பு ஐயாயிரம் ரூபாய் என்று கூறி அனுப்பினான்.

அப்போது அத்துறவி அந்த வாலிபனிடம் "பார்த்தாயா! இந்த மோதிரத்தை அந்தப் பெண்ணுக்கு மதிப்பிடவே தெரியவில்லை. அது போல உனக்கு ஸூஃபி தத்துவம் பற்றி எதுவும் தெரியாது" என்றார்.

அந்த வாலிபன் தலை குனிந்து நின்றான்.

இந்தியப் பண்டிகைகள்

# தசரா

## வெற்றி பெற்றதற்கான பண்டிகை

இந்தியப் பண்டிகைகளில் தசரா கொண்டாடப்படுவது போல வேறு எந்தப் பண்டிகையும் இவ்வளவு கோலாகலமாகக் கொண்டாடப்படு வது இல்லை என்றே கூறலாம். இது புரட்டாசி மாதத்தில் அதாவது அக் டோபரில் கொண்டாடப்படுகிறது. துர்க்காதேவி மகிஷாசுரனை வென்ற தன் நினைவாக இது கொண்டாடப் படுகிறது.



இதற்கான புராணக்கதையின்படி மகிஷாசுரன் என்ற ராட்சஸன் சிவ பெருமானிடம் தன்னை எந்தக் கடவு ளும் வெல்லக்கூடாது என்ற வரத் தைக் கேட்டுப் பெற்றுக் கொண் டான். இதனால் கர்வம் கொண்டு அவன் எல்லா உலக வாசிகளையும் துன்புறுத்தலானான். தேவர்கள் ஒன்று கூடி அந்த ராட்சஸனை ஒழிக்க வழி வகுத்தார்கள். அதன் காரணமாகத் தான் துர்க்காதேவி அவதரித்தாள்.

துர்க்காதேவி தன் அளவற்ற ஆயு தங்களையும், சக்தியையும் கொண்டு மகிஷாசுரனுடன் போர் புரிந்தாள். கடுமையான போருக்குப் பின் மகிஷா சுரன் துர்க்கா தேவியின் கையால் மடிந்தான்.

நம் நாட்டில் சில பகுதி களில் தசரா ஒன்பது நாட் களுக்குக் கொண்டாடப் படு கிறது. மாளய அமாவா சைக்கு மறுநாள் முதல் ஒன் பது நாட்களுக்கு நவராத்திரி என்று கொண்டாடப்படுகி றது. பத்தாவது நாளை விஜய தசமி எனக் கூறி புதிய முயற்சி களைச் செய்ய அந்த நாளை நல்ல நாளென்று கருதுகிறார்கள்.

இன்னும் சில பகுதிகளில் ஒன் பது நாட்களோடு விஜயதசமியையும் சேர்த்து பத்து நாட்கள் பண்டிகையாக

தசரா என்ற பெயரில் கொண்டாடப் படுகிறது.

### மேற்கு வங்காளத்தில் துர்க்கா பூஜை:

உங்களது தாயார் எப்போதாவது தன் பிறந்த வீட்டிற்குப் போய் விட்டுத் தானே வருகிறார்? அது போல் துர்க்கா தேவி தன் கணங்களுடன் ஆண்டுதோறும் தன் பிறந்த வீடான இமயமலைக்குச் சென்று வருகிறாள் என்று வங்காளிகள் நம்புகிறார்கள்.

துர்க்கா தேவியின் இந்த வருடாந்திர விஜயத்தைத் தான் மேற்கு வங்காளத்தில் துர்க்கா பூஜை என்று கொண்டாடுகிறார்கள்.

இச்சமயத்தில் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட பந்தல்களில் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி, விநாயகர், கார்த்திகேயன் (முருகன்) ஆகிய அழகிய சிலைகளை வைத்துப் பூஜை செய்கிறார்கள்.

துர்க்காதேவி ஒரு சிங்கத்தின் மீது அமர்ந்து தன் காலைக் கீழே விழுந்து கிடக்கும் மகிஷாசுரனை பலமாக மிதித்துக் கொண்டிருக்கும் சிலை வைக்கப்பட்டிருக்கும். தீயவை அழிந்து நல்லவை வெற்றி பெறும் என்பதை இது காட்டுகிறது.

இந்தப் பூஜை இப்பண்டிகையின் ஏழாவது நாளன்று மகாசப்தமியாகச் செய்யப்படுகிறது. எட்டாவது நாளிலும் மகாஷ்டமி எனப் பூஜை செய்யப் படுகிறது. மத்தளம் கொட்டிக் கொம்புகள் ஊதப்படுகின்றன. விஜயதசமியன்று இந்த சிலைகள் அலங்காரத் தேர்களில் வைத்து ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டு நீர் நிலைகளிலும் கடலிலும் கரைக்கப்படுகின்றன.

வங்காளப்பெண்மணிகள் துர்க்கா தேவிக்கு விடை கொடுத்து அனுப்புவதை சிந்தூர்கெல்லா' என்று கூறுகிறார்கள். விஜயதசமியன்று பெண்கள் பந்தல்களில் கூடி தேவியின் நெற்றியில் குங்குமத்தை வைக்கிறார்கள். அவளது வாயில் ஒரு இனிப்புப்



பண்டத்தை வைத்து கையில் பான் (வெற்றிலை) சுருளை வைக்கிறார்கள். இது தேவிக்கு விடை கொடுத்து வழியனுப்பும் முறையாம். இச்சமயத்தில் பெண்கள் ஒருவர் நெற்றியில் மற்றவர் 'சிந்தூர்' (குங்குமம்) வைத்து மகிழ்வதும் வழக்கமாம்.

### மைசூர் தசரா:

ஆண்டு தோறும் மைசூரில் நடக்கும் தசரா பெயர் பெற்றது. கிருஷ்ண தேவராயர் ஆண்ட பதிநான்காம் நூற்

றாண்டில் விஜயநகர் சாம்ராஜ்யத்தில் முதலில் இது கோலாகலமாகக் கொண்டாடப்பட்டதாம். விஜயநகர சாம்ராஜ்ஜியத்தின் கடைசி மன்னர் மைசூரை ஆண்டு வரும் பொறுப்பை மும்மடி கிருஷ்ணராஜ உடையாரிடம் ஒப்படைத்தார்.

பிரிட்டிஷர் ஆண்ட காலத்தில் மைசூரில் தசரா மிக ஆர்ப்பாட்டமாய்க் கொண்டாடப்பட்டு வந்தது. ராணுவ அணி வகுப்பும், அரசாங்க ஊழியர்களின் கூட்டமும் மாலையில் ஊர்வலம் வந்தன.

புகழ் பெற்ற இசைக் கலைஞர்களும் நடனக்கலைஞர்களும் மற்றும் பலதுறைகளின் கலைஞர்களும் இந்த ஊர்வலங்களில் கலந்து கொண்டார்கள். அலங்கரிக்கப்பட்ட யானைகள், ஒட்டகங்கள், குதிரைகள் முதலியனவும் இந்த ஊர்வலங்களில் சென்றன. பீரங்கிகள், துப்பாக்கிகள், சவாரி வண்டிகள் எனப்பலவற்றையும் இவ் ஊர்வலங்களில் காண முடிந்தது.

மைசூர் மன்னர் தன் யானை மீது வைக்கப்பட்ட அம்பாரியில் தங்க சிம்மாசனத்தில் அமர்ந்து ஊர்வலமாகச் செல்வது வழக்கம். மன்னர் பிறகு பூஜை செய்வது பெரும் நிகழ்ச்சி. பல வித வாத்தியங்கள் அந்த சமயம் முழங்கும். அது சமயம் பாதையின் இரு புறங்களிலும் மக்கள் நின்று மன்னருக்கு வாழ்த்துக்களைத் தெரிவிப்பார்கள். இப்போது அவ்வளவு ஆர்ப்பாட்டமும், படாடோபமும் இல்லாது போனாலும் ஆண்டு தோறும் தசரா ஊர்வலங்கள் கவர்ச்சிகரமாகவே நடைபெற்று வருகின்றன.

## ராம் லீலா



வட இந்திய மாநிலங்களில் தசரா ராமர் ராவணனை வென்றதை நினைவுறுத்தக் கொண்டாடப்படுகிறது. சீதையை அபகரித்த தீய ராவணனை தூய ராமர் ஒழித்து நல்லவனவயே தலை தூக்கி நிற்கும் என உலகிற்குக் காட்டினார். இவ்விழாவில் ராம் லீலா நாடகம் போட்டு முடிவில் ராவணன், கும்பகர்ணன், இந்திரஜித் ஆகிய மூவரின் உருவப்பொம்மைகளைச் செய்து எரிக்கிறார்கள்.

### இமாசலப்பிரதேசத்தில் தசரா:

இமாசலப்பிரதேசத்தின் குலூ பள்ளத்தாக்கில் அலாதியான முறையில் தசரா கொண்டாடப்படுகிறது.

ரகுநாத பகவானின் தங்க, வெள்ளி விக்கிரகங்கள் கோலாகலமாய் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகின்றன.



## தமிழ்நாட்டில் நவராத்திரி:

தமிழ்நாட்டில் தசரா நவராத்திரி என்று கொண்டாடப்படுகிறது. வீடுகளில் பொம்மைகளை அலங்கரித்து கொலுக்கள் வைக்கப்படுகின்றன. வீடுகளில் இந்த பொம்மைகள் தலைமுறை தலைமுறையாக இருந்து வருகின்றன. கடவுள்களின் உருவப் பொம்மைகளும், காலம் மாறுவதற்கு ஏற்ப புது வித பொம்மைகளும் கொலுவில் வைக்கப்படுகின்றன. கல்யாணம், ரயில் பாதை, ஆகாய விமானம், கிரிக்கெட் விளையாட்டு என பொம்மைகள் வைக்கப்படுகின்றன. விஜயதசமியன்று சிறு குழந்தை களுக்கு கல்வி கற்பிக்க ஆரம்பிக்கிறார்கள். பள்ளிகளில் அவர்களைச் சேர்க்கிறார்கள்.

விஜயதசமி எதையும் செய்ய நல்ல நாளாகக் கருதப்படுகிறது.

## குஜராத்தில் நவராத்திரி:

நவராத்திரி இம்மாநிலத்தில் குதூகலத்தை அளிக்கிறது. பெண்கள் புத்தாடைகள் அணிந்து மண் விளக்குகளைச் சுற்றி நடனம் ஆடுகிறார்கள். கும்மி, கோலாட்டங்களும் நடைபெறுகின்றன.

கிருஷ்ண பகவான் கோபிகைகளுடன் ராஸநிருத்தியம் என நடனமாடியதாயும், கோலாட்டம் போட்டதாயும் நம்பியே இம்மாநில மக்கள் கும்மி, கோலாட்டம் என்ற நிகழ்ச்சிகளை நடத்தி மகிழ்கிறார்கள்.

இந்நிகழ்ச்சியில் கார்பா என்ற சிறப்பு நடனமும் சேர்க்கப்படுகிறது. இந்நடனம் பகவான் கிருஷ்ணரின் பேரன் அனிருத்தனின் மனைவி உஷாவினால் ஆரம்பித்து வைக்கப்பட்டதாக இங்குள்ளவர்கள் நம்புகிறார்கள்.








# ஆஹா! அருமையான பொழுது போக்கு!



தோரணங்களும், வண்ணக்கொடிகளும், திரைச்சிலைகளும் இல்லாவிட்டால் எந்தப் பண்டிகையும் விழாவும் எடுபடாதே. இங்கே சுவரில் ஒட்டப்படும் சித்திரங்கள் கொண்ட காகிதத்தைப் பாருங்கள்.

சிவப்பு, நீலம், மஞ்சள் ஆகிய மூன்று வண்ணக்காகிதங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு பென்சில், ரூல் தடி, கத்தரிக்கோல், பசை, ஊசி, நூல் முதலியவற்றையும் வைத்துக் கொள்ளவும்.

1. ஒவ்வொரு காகிதத்திலும் ஏழு சம நீளத்துண்டுகளைக் கத்தரிக்கவும். பின் பசை யைப் பயன்படுத்தி ஒவ்வொரு துண்டையும் வளையவடிவில் ஒட்டவும். நீளக்காகிதத் துண்டு 15×1 செ.மீ: மஞ்சள் துண்டு 12.5 ×1 செ.மீ: சிவப்பு காகிதத்துண்டு 10×1செ.மீ.
2. நீல வளையங்களைச் சேர்த்து முனைகளைத் தைத்து நன்கு ஒட்டவும்.
3. சிவப்பு வளையங்களை நீல வளையங்களுக்குள் வைக்கவும். மஞ்சள் வளையத்தை இந்த இருவளையங்களுக்கிடையே வைத்து ஒட்டவும்.
4. இப்படிச் செய்து கிடைத்த டிசைனை ஒரு நூலில் கட்டித் தொங்கவிடலாம். அல்லது சுவர்களில் ஒட்டலாம்.

இவ்வாறு விதவிதமான டிசைன்களைச் செய்து வண்ணத் தோரணங்கள், கொடிகள் என்று வீட்டை அலங்கரிக்கலாம்.

தசரா குதூகலத்தை அளிக்கட்டும்!

# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள் — ஜதுமணி



பத்தொன்பதாவது நூற்றாண்டில் வாழ்ந்த ஓரியாக்கவிஞர் ஜது மணியின் தந்தை முகுந்த் ஒரு சிற்பி. அவர் ஒரு கிருஷ்ணர் சிலையை உருவாக்கினார். ''இந்த ராதாநாதரை எங்கே கொண்டு போய் வைப்பது?'' என்று ஜதுமணி தன் தந்தையிடம் கேட்க அவரது தந்தை ''நாமே ஒரு கோவிலைக் கட்டுவோம்'' என்றார்.

முகுந்த் தன் சொத்தையெல்லாம் கோவில் கட்டுவதில் செலவிட்டு விட்டார். அவர் இறந்த போது அவரது ஈமச்சடங்குகளைச் செய்யக் கூட ஜதுமணியிடம் பணம் இல்லை. அவர் என்ன செய்வதெனத் திகைத்தவராய் ''எனக்கு மன்னர் தான் உதவ வேண்டும். ஆனால் நான் எப்படி அணுகுவது?'' என்று யோசிக்கலானார்.





உச்சி வேளையாகி விட்டது. கடவுளுக்கு நைவேத்தியம் செய்து விட்டு அர்ச்சகர் கோவில் கதவை மூடிவிட்டுப் போய் விட்டார். அப்போது ஜதுமணிக்கு மன்னர் அந்த நேரத்தில் தான் அவ்வழியாகச் செல்வார் என்பது நினைவிற்கு வந்தது. உடனே அவர் கோவிலுக்குப் போய் அதன் கதவை பலமாகத் தட்டி ''கிருஷ்ணா! ராதாநாத்! எழுந்திரு'' என்று உரக்கக் கூவினார்.

மன்னனின் பல்லக்கு அவ்வழியே வந்து கொண்டிருந்தது. யாரோ ஒருவர் கோவில் கதவை பலமாகத்தட்டி உரக்க ஏதோ சொல்லிக்கொண்டிருப்பதை மன்னன் கேட்டான். அவன் தன் பணியாளிடம் ''நீ அங்கே போய் என்ன என்று விசாரித்து வா'' என்று சொல்லி அவனை அனுப்பினான்.





மன்னன் பல்லக்கில் இருக்க, பணியாள் கோவில் கதவருகே இருந்த ஜதுமணியிடம் போனான். அப்போது ஜதுமணி ராஜா!'' என்று ஆச்சரியத் தோடு கூறினார்.



பணியாள் அவரை அழைத்துக் கொண்டு போய் மன்னன் முன்னால் நிறுத்தி ''அரசே! ராதாநாதர் விக்கிர கத்தை உருவாக்கிய சிற்பி முகுந்தின் மகன் ஜதுமணி இவர்'' என்றான். மன்னனும் கடுமையாக ''நீ பைத்தி யமா? ஏன் கோவில் கதவை இப்படி பலமாகத் தட்டுகிறாய்?'' என்று கேட்டான்.



ஜதுமணியும் மன்னனை வணங்கி ''அரசே! இந்த ராதாநாத் என் அண்ணன். நான் பிறப்பதற்கு முன்பே இவனை என் தந்தை பெற் றார். என் தந்தை இறந்து விட்டார். அதனால் மூத்த மகனான இவன் வந்து தானே அவருக்கு ஈமச் சடங்குகளைச் செய்ய வேண்டும்? ஆனால் அவன் எழுந்து வராமல் இருக்கிறானே!'' என்றார்.



மன்னன் ஒரு பணப்பையை எடுத்து அவரிடம் கொடுத்து ''உன் ராதாநாத் இப்போது எழுந்து வரமாட்டார். இதை எடுத்துப் போய் நீ உன் தந்தை யின் ஈமச்சடங்குகளைச் செய். எல்லாவற்றையும் முடித்து விட்டு என் தர்பாருக்கு வா. அங்கு உன் சிரிப்பு மூட் டும் பேச்சுகளை மேலும் கேட்கிறேன்'' என்றார்.

# செய்திச்சுடர்

## உண்மையே, நம்புங்கள்




ஒரு மீனைப் பற்றிய செய்தி இது. கருப்புமர்லின் என்ற வகையின் ஒரு மீன் நான்கு ஆண்டுகளில் 13,000 கி. மீ தூரம் நீந்திச் சென்றுள்ளது. இந்தப் பயணம் 1996ல் ஆரம்பமாகியதாம். பெர்ல் ஏட்ஸ் தன் படகில் போய்க் கொண்டிருந்த போது அந்த மீனைப் பிடித்துக் கட்டி வைத்திருந்தாளாம். அதை ஆஸ்ட்ரேலியாவின் கிரேட்பாரியர் ரீஃப் அருகே கடலில் விட்டு விட்டாளாம். கடந்த மே மாதத்தில் அந்த மீன் மத்திய அமெரிக்க நாடு கோஸ்டாரிகாவின் கியூபோல் என்ற இடத்தில் ஒரு மீனவனின் வலையில் சிக்கியது. அந்த மீன் அங்கு பசிபிக்மாக்கடலைக் கடந்து சென்றுள்ளது. பெர்ல் அந்த மீனில் கட்டி விட்ட துணித் துண்டிலிருந்த பெயரை ஒரு அமெரிக்க ஆராய்ச்சியாளரிடம் கூற அவர் பெர்ல் ஏட்ஸிற்குத் தெரிவித்தாராம்.

## மிருகங்களின் செயல்களில்லாத சர்க்கஸ்





சிங்கம், புலி, கரடி, குரங்கு போன்ற மிருகங்கள் செய்யும் வித்தைகளை சர்க்கஸ்களில் காட்டக் கூடாது என இந்திய அரசாங்கம் கட்டளை இட்டுள்ளதை உச்ச நீதி மன்றம் சரியானதே என்று கூறி விட்டது. சில சர்க்கஸ் கம்பெனிகளும் சர்க்கஸ் பெடரேஷன் ஆப் இந்தியாவும் அரசாங்கத்தின் இந்த உத்தரவை எதிர்த்து உச்சநீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்யவே, உச்சநீதிமன்றம் அதைத் தள்ளுபடி செய்து இந்தத் தீர்ப்பைக் கூறியது. இந்த மிருகங்களுக்குப் பயிற்சி அளிக்கும் போது கொடுமைப்படுத்தப்படுவதாக அது தெரிவித்துள்ளது. இந்த வழக்கு நாற்பது ஆண்டுகாலமாக நடந்து இந்த முடிவுக்கு வந்தது.

## நீளமான ரயில் வண்டி



இந்த மிக நீளமான ரயில் வண்டியைப் பார்க்க வேண்டுமானால் நீங்கள் ஒரு விமானத்தில் அமர்ந்து உயரப் பறந்தால் தான் முடியும். அப்போது தான் இதன் முழு நீளத்தையும் காணலாம். இந்த சரக்குரயில் வண்டி மேற்கு ஆஸ்ட்ரேலியாவில் 682 சரக்குவேகன்களுடன் கிளம்பிய போது அந்த ரயில் வண்டியை எட்டு சக்தி வாய்ந்த என்ஜின்கள் இழுத்துச் சென்றன. இந்த ரயில் வண்டி 7.35 கி. மீட்டர் நீளம். இது பாம்புபோல வளைந்து வளைந்து சென்றதாம்

## கிளியின் அபயக்குரல்

இங்கிலாந்தில் அவசர அபாயத்திற்கு உதவிகோர தொலைபேசியில் 999 என்ற எண்ணைத் தொடர்பு கொள்ள வேண்டும். ஒரு நாள் எங்கிருந்த யாரோ இந்த எண்ணைப் பயன்படுத்தவே, மான்செஸ்டர் போலீஸ் எங்கிருந்து தொடர்பு கொள்ளப்பட்டது எனக் கண்டு பிடித்து அந்தத் தொலைபேசி யந்திரமுள்ள வீட்டிற்குள் சென்றார்கள். அங்கு தொலை பேசியில் பேசப் பயன் படும் பகுதி அதிலிருந்து எடுக்கப்பட்டு தனியாக வைக்கப்பட்டுள்ளதையும், எண்களுள்ள பகுதியில் ஒரு கிளி உட்கார்ந்திருப்பதையும் கண்டனர். அந்தக் கிளி தான் '9' என்ற எண்ணை மூன்று முறை அமுக்கி இருக்கிறது என்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள்.



# மாமரத்தில் முளைத்தது ஜிலேபி

அந்த ஊரில் அசோக் என்ற இளைஞன் மிகவும் கெட்டிக்காரன். அவன் எந்த வேலையையும் எளிதில் திறமையுடன் நேர்த்தியாகச் செய்து முடித்து விடுவான். ஆனால் அவனுக்கு வாய்த்த மனைவி ஆஷா மகா மக்கு. எந்த வேலையையும் ஒழுங்காகச் செய்யத் தெரியாதவள். மேலும் அரட்டை அடிப்பது என்றால் அவளுக்கு மிகவும் பிடிக்கும்.

அவள் பேச்சால் அசோக் இக்கட்டான நிலைகளில் அகப்பட்டுக் கொண்டும் இருக்கிறான். ஆனால் ஒரு விஷயம் ஆஷா 'சள சள'வென்று பேசிக்கொண்டிருப்பாளேயொழிய யாருக்கும் அவள் கெடுதல் செய்வதே இல்லை.

ஒரு நாள் ஆஷாவிற்கு சர்க்கரை வள்ளிக்கிழங்கு சாப்பிடவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதை அசோக்கிடம் அவள் தெரிவித்தாள். அந்த கிராமத்தவர் சர்க்கரை வள்ளிக் கிழங்கு தேவைப்பட்டால் அருகிலுள்ள காட்டிற்குப் போய் தோண்டி தமக்கு வேண்டிய அளவிற்கு எடுத்து வருவது வழக்கம். அசோக்கும் வள்ளிக்கிழங்கை எடுத்து வர காட்டிற்குச் சென்றான்.



அவன் ஓரிடத்தில் தோண்டிய போது அவனது மண்வெட்டி எதிலோ மோதி 'டங்' கென்ற ஒலியைக் கிளப்பியது. அந்த இடத்தை மேலும் தோண்டவே அங்கு தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு செப்புக்குடம் கிடைத்தது. அவன் அதை நன்கு பார்த்தான். அது புதுக்குடம். நாணயங்களும் புது நாணயங்களே. எனவே அவற்றை அண்மையில் தான் யாரோ திருடி அங்கே புதைத்து வைத்திருக்க வேண்டுமென்று ஊகித்து விட்டான்.

அப்போது அவன் தன் மனதில் ''இதை இப்போது நான் என் வீட்

டிற்கு எடுத்துக் கொண்டு போகக் கூடாது. ஆஷாவிற்கு விஷயம் தெரிந்தால் ஊர் பூராவும் டமாரம் அடித்து விடுவாள். செய்தி கேட்டு காவலதிகாரி வேறு வந்து தொல்லை கொடுப்பான். இதிலிருந்து தப்ப என்ன செய்யலாம்?'' என்று யோசிக்கலானான்.

கடைசியில் அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. சுற்றிலும் பார்த்தான். பெரிய பொந்துள்ள ஆலமரம் ஒன்று தென்பட்டது. அதனுள் தங்க நாணயங்களுள்ள குடத்தை யார் கண்ணிலும் படாமல் மறைத்து வைத்தான்.

செய்து முடித்து விட்டு ஊரிலுள்ள தன் வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

ஆஷாவும் ''வள்ளிக்கிழங்கு கிடைத்ததா?'' என்று கேட்டாள். அசோக்கும் ''அதை விட்டுத் தள்ளு. காட்டில் ஒரு பெரிய மாமரத்தில் பெரிய பெரிய மாம்பழங்களைப் பார்த்தேன். நாம் போய் அவற்றைப் பறித்து வரலாம். வா'' என்றான். அவளும் உடனே கிளம்பி விட்டாள்.

அசோக் முதலில் ஆலமரத்திற்குப் போய் பக்கத்தில் இருந்த மாமரத் திற்கு அழைத்துச் சென்றான். ஆஷா



பிறகு ஊருக்குள் போய் ராமய்யர் பட்சணக்கடையில் அவன் ஒரு கிலோ ஜிலேபி வாங்கிக் கொண் டான். அதன் பிறகு இன்னொரு கடைக்குப் போய் ஒரு பெரிய வாழைப்பழ குலையை வாங்கிக் கொண்டான். அவற்றை எடுத்துக் கொண்டு அவன் மறுபடியும் காட்டிற்குச் சென்றான். அவன் தான் திட்டமிட்டபடி வேலைகளைச்

அப்போது ''நானே மரத்தில் ஏறி மாம்பழங்களைப் பறிக்கிறேன்'' என்று அண்ணாந்து பார்த்தாள். உடனே ஆச்சரியத்துடன் ''ஆ! மாமரத்தில் ஜிலேபிகள் காய்த்துத் தொங்குகின்றனவே. என்ன அதிசயம்!'' என்று கூவினாள்.

அசோக்கோ ''இருக்காதே. நான் நம்ப மாட்டேன்'' என்றான் ஒன்றும்



அவனும் ''ஆமாம். மாமரத்தில் ஜிலேபி! அரளிச் செடியில் வாழைப்பழம்!! எல்லாம் ஒரே அதிசயமாய் இருக்கிறதே. இன்னும் ஏதாவது அதிசயத்தைப் பார்க்கப் போகிறோமோ?'' என்று கூறியவாறே அவளை அழைத்துக் கொண்டு ஆலமரத்தின் பொந்தின் பக்கத்தில் போய் நின்றான்.

பிறகு அவன் சுற்றிலும் பார்த்தவாறே ''இன்னொரு அதிசயம்! இந்தப் பொந்திற்குள் ஏதோ மின்னுகிறதே'' என்று கூறி பொந்திற்குள் கையை விட்டான்.

அடுத்த விநாடி அவன் பித்தளைக் குடத்தைப் பொந்திலிருந்து எடுத்தவாறே ''ஆகா!

தெரியாதவன் போல. ஆனால் அவன் தான் அந்த ஜிலேபிகளை அந்த மரத்தில் கட்டித் தொங்க விட்டவன். பிறகு அவன் தலை நிமிர்ந்து பார்த்து விட்டு ''ஆமாம். நீ சொன்னது உண்மை தான். அதோ பார்! அந்த புதரில் தங்க அரளிப்பூ நிறையப் பூத்திருக்கிறது. போய்ப் பறித்துவா. பூஜைக்கு உதவும்'' என்றான்.

ஆஷாவும் புதருகே போனதும் ''ஆகா! இங்கே தங்க அரளிப்பூக்கள் இல்லை. எல்லாம் மஞ்சள் நிற வாழைப் பழங்கள்!'' என்று கூறி வந்து பார்க்கும்படி அசோக்கை அழைத்தாள். அசோக் சிரித்துக் கொண்டே அங்கு சென்றான். ஏனெனில் அச்செடிகளில் வாழைப்பழங் களைக் கட்டி வைத்தவன் அவன் தானே.

பித்தளைக் குடம்! இது நிறையத் தங்கக் காசுகள் வேறு இருக்கின்றனவே. இன்று எல்லாமே அதிசயமாகவே இருக்கிறது!'' என்று கூறி ''இந்தக் குடமும் தங்கக் காசுகளும் கிடைத்ததை யாரிடமும் சொல்லி விடாதே. சொன்னால் நமக்குத் தான் ஆபத்து'' என்று எச்சரித்தான்.

ஆனால் ஊருக்குப் போனதும் முதல் வேலையாக அவள் அடுத்த வீட்டு அம்புஜத்திடம் பித்தளைக் குடம் நிறைய தங்கக் காசுகளைக் காட்டிலிருந்து எடுத்து வந்திருப்பதாகக் கூறினாள். அம்புஜம் கோடி வீட்டுக் கோமளாவிடம் ''ஆஷாவின் வீட்டிற்கு வண்டி நிறையத் தங்கக் காசுகள் புதையலில் கிடைத்தன'' என்று சொல்லி வைத்தாள்.

இப்படியே ஒவ்வொரு பெண் மணியும் தன் கற்பனை வளத்தைக் காட்டிக் கூறிக்கொண்டே போக காவலதிகாரியிடம் அச்செய்தி போன போது அசோக் வீட்டிற்குப் பத்து லாரிகளில் தங்க நாணயங்கள் வந்து சேர்ந்துள்ளன என்றாகி விட்டது.

காவலதிகாரி ஒரு காவலனிடம் ''நீ போய் அந்த அசோக்கையும் ஆஷாவையும் இங்கே அழைத்து வா'' என்றார். அவர்கள் வந்ததும் அந்த அதிகாரி ''என்ன இது? உங்கள் வீட்டிற்குப் பத்து லாரிகளில் தங்க நாணயங்கள் வந்து இறங்கியதா?. இது உண்மையா?'' என்று கேட்டார்.

அசோக் பதில் சொல்வதற்குள் ஆஷா முந்திக் கொண்டு ''பத்து லாரியா! இல்லவே இல்லை. ஒரு பித்தளைக் குடம் நிறையத்தானே கிடைத்தது'' என்றாள்.

அதிகாரியும் ''அது எப் படி, எங்கே, எப்போது கிடைத்தது?'' என்று கேட்டார். அசோக் பதில் கூறவில்லை. ஆஷாவே ''நாங்கள் ஒரு நாள் காட்டிற்குப் போனோமா? அன்று மாமரத்தில் ஜிலேபி காய்த்துத் தொங்கிக் கொண்டிருந்தது. அரளிச் செடிகளில் வாழைப் பழங்கள் முளைத்திருந்தன. அன்றுதான் பித்தளைக் குடம் நிறையத் தங்க நாணயங் கள் கிடைத்தன'' என்றாள்.

அதிகாரியோ ஆஷாவைப்பார்த்து ''என்ன உளறுகிறாய்? மாமரத்தில் ஜிலேபி காய்த்துத் தொங்கியதா? அரளிச்செடிகளிலிருந்து வாழைப் பழங்களா? நீ பைத்தியமா?'' என்று கேட்டார். அப்போது அசோக் ''இவள் இந்த மாதிரித்தான் ஏதாவது உளறிக் கொண்டே இருக்கிறாள். அதை ஊரார் நம்பிக் கதை ஜோடித்து விடுகிறார்கள். இவள் சொல்வதை நம்பவே வேண்டாம்'' என்று கூறினான்.

அதிகாரியும் ''ஏய் பைத்தியம்! இம்மாதிரி எல்லாம் உளறிக் கொண்டு திரியாதே. மீறி நடந்தால் தண்டனை கிடைக்கும்'' என்று ஆஷாவை எச்சரித்து அசோக்கையும் அவளையும் அனுப்பிவிட்டார்.

அசோக்கும் அதன் பின் காட்டில் கிடைத்த தங்க நாணயங்களைக் கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தான்.



# நம் இந்தியா

## வினாக்கள்

பண்டிகைகள் ஆரம்பமாகி விட்டன. அவற்றில் சில மத சம்மந்தமானவை. வேறு சில உழவு சம்மந்தமானவை. இன்னும் சில சமூகப் பழக்கவழக்கங் களின் அடிப்படை கொண்டவை. இந்த மாத வினாக்கள் சில இந்தியப் பண்டிகைகள் பற்றியவை. இவ்வினாக்களின் விடைகளைக் காணுங்கள்.

1. மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்களின் அடிப்படையில் கொண்டாடப்படும் பண்டிகை எது?
2. பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செய்து ராவணனைக் கொன்று விட்டு ராமர் அயோத்திக்குத் திரும்பி வந்ததைக் குறிக்கும் பண்டிகை எது?
3. குழந்தைகள் கல்வி கற்க ஆரம்பிக்கும் நன் நாளாக எந்த தினத்தை நினைக்கிறார்கள்?
4. சகோதர, சகோதரிகளை இணைக்கும் பண்டிகை எது?
5. பார்ஸிகள் தம் மதத் தலைவரின் பிறந்த நாளை என்று கொண்டாடுகிறார்கள்?
6. முஸ்லிம்கள் நபிகள் நாயகத்தின் பிறந்த நாளை எந்தப் பெயரில் கொண்டாடுகிறார்கள்?
7. ஈஸ்டரின் சிறப்பு என்ன?
8. புத்த பூர்ணிமாவின் மூன்று சிறப்புகள் யாவை?
9. தமிழ்நாட்டில் உழவர் பண்டிகை எனக் கொண்டாடப்படும் பண்டிகை எது?
10. மகர சங்கிராந்திக்கும் தென்னிந்தியக் கோவில் ஒன்றிற்கும் தொடர்பு உள்ளது. அந்தக் கோவில் எது?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## செப்டம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. நாலந்தா
2. ரவீந்திரநாத டாகூர், 1901ல்
3. கலாஷேத்திரம், ருக்மிணிதேவி அருண்டேல்
4. 1986
5. சிம்லா
6. மதன் மோகன் மாளவியா
7. அலீகட் முஸ்லிம் பல்கலைக் கழகம்
8. ஆதாரக்கல்வி (நயிதாலிம்)
9. மௌலானா அபுல்கலாம் ஆஜாத்
10. 1857
11. 1835, லார்ட் மெக்காலே
12. டாக்டர் மால்கம் ஆதி சேஷய்யா
13. துரோணாசாரியர்.
14. கலாமண்டலம், செருதுருத்தியில்
15. தட்சசீலம்



# தேவி பாகவதக் கதைகள்

பிரம்மாவின் வேண்டுகோளின் படி யோக நிதித்திரையிலிருந்து விஷ்ணு எழுந்தார் என்று சூதர் கூறவே, முனிவர்களும் ''பிரம்மாவும், விஷ்ணுவும், சிவனும் முறையே ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற தொழில்களைச் செய்பவர்களாயிற்றே. விஷ்ணு யோகநித்திரையில் இருந்த போது அவரது சக்தி என்னவாயிற்று? அவரை விட ஆதிசக்திக்கு அதிக சக்தி எவ்வாறு கிடைத்தது? விஷ்ணு சர்வ சக்தி படைத்தவராயிற்றே. நீங்கள் ஆதிபராசக்தி தான் எல்லா சக்திகளின் மூல காரணம் என்கிறீர்கள். உண்மை என்ன என்பதை விளக்குவீர்களா?'' என்று கேட்டனர்.

சூதரும் இவ்வாறு கூறத் தொடங்கினார் ''முனிவர்களே! சொல்கிறேன் கவனமாகக் கேளுங்கள். நாரதர் முதலானோர் ஆதிபராசக்தியின் பெருமையைப் புரிந்து கொள்ளாமல் விஷ்ணுவே சர்வசக்திமான் என்று எண்ணினார்கள். சிலர் சிவனை பரம் பொருள் என்றும் வேறு சிலர் சூரியன், அக்கினி, சந்திரன் ஆகியோரை சக்தி படைத்தவர்களென்றும் எண்ணி விட்டார்கள். யார் என்ன தான் கூறினாலும் ஆதிபராசக்தி தான் சர்வ வல்லமை படைத்தவள். அவள் பிரம்மா, விஷ்ணு, சிவன், சூரியன், அக்கினி, வாயு, சந்திரன் என எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறாள்.

அந்த சக்தியால் விழிப்படைந்த விஷ்ணு பிரம்மாவிடம் ''நீ இங்கு வந்த காரணம் என்னவோ?'' என்று கேட்டார். பிரம்மாவும் ''உங்கள் காதுகளிலிருந்து தோன்றிய இரு ராட்சஸர்கள் என்னைக் கொன்று விடுவதாகக் கூறிப் போருக்கு அழைக்கிறார்கள்'' என்றார். ''இதற்கா பயப்படுகிறாய்?

2. மது, கைடபர் வதம்– சுகரின் பிறப்பு



நான் எவ்வளவோ ராட்சஸர்களைக் கொன்றிருக்கிறேன்'' என்று விஷ்ணு கூறிக் கொண்டிருக்கும் போதே மதுவும் கைடபனும் பிரம்மாவின் அருகே வந்து ''ஓடி வந்து இங்கேயா ஒளிந்து கொண்டிருக்கிறாய்? உன்னை இந்த விஷ்ணுவா காப்பாற்றப் போகிறான்?'' என்று கூறி ஏளனமாகச் சிரித்தார்கள்.

விஷ்ணு பிரம்மாவைத்தன் பின்னால் வந்து நிற்கும்படி சொல்லி ராட்சஸர்களைப் பார்த்து ''அடே! கொழுப்பு அதிகரித்து விட்டதா? அதை நான் அடக்குகிறேன் பார்'' என்றார். பராசக்தி இதை ஆகாயத்தில் இருந்து பார்த்துக் கொண்டிருந்தாள். விஷ்ணு மதுவுடன் சண்டை போட்டார். மது களைத்துப் போவதைக் கண்டு கைடபன் அவருடன் மற்போர் புரிய வந்தான். விஷ்ணுவுக்கு ஒரே சமயத்தில் இரண்டு ராட்சஸர்களுடன் போர் புரிய வேண்டியதாயிற்று.

விஷ்ணு களைப்படையத் தொடங்கினார். அந்த ராட்சஸர்களை எப்படி வெல்வது என்று யோசிக்கலானார். அதைக் கண்டு அவர்கள் ''களைத்துப் போய் விட்டாய் உன்னால் போர் புரிய முடியவில்லை என்றால் எங்களிடம் சரணடைந்து விடு. அப்படிச் செய்ய மறுத்தால் உன்னையும் கொன்று பிரம்மாவையும் கொன்று விடுவோம்'' என்று மிரட்டினார்கள்.

விஷ்ணுவும் கோபம் கொள்ளாமல் ''களைத்துப்போனவருடனும், புறமுதுகு காட்டி ஓடுபவருடனும், பயப்படுபவருடனும், போர் களத்தில் விழுந்து கிடப்பவருடனும், சண்டை போடுவது யுத்த தர்மமாகாது. மேலும் நீங்கள் இருவர் ஒருவனாகிய என்னுடன் சண்டையிடுவதும் போர் முறைகளுக்குப் புறம்பானது. எனவே என்னைச் சற்று இளைப்பாற விடுங்கள். பிறகு நான் சண்டை போடுகிறேன். யுத்த தர்மப்படி தான் நாம் போரிட வேண்டும்'' என்றார்.

அவர்களும் ''சரி. நீ இளைப்பாறு நாங்களும் சற்று ஓய்வு எடுத்துக் கொள்கிறோம்'' என்றார்கள். அப்போது விஷ்ணு தம் திவ்விய திருஷ்டியால் அந்த ராட்சஸர்கள் வரம் பெற்றதை அறிந்து கொண்டு ''அடடா! இது தெரியாமல் இவர்களோடு சண்டை போட்டுக் கொண்டு இருந்து விட்டேனே. இவர்கள் தமக்கு மரணம் தம் விருப்பப்படி வர வேண்டுமென ஆதி பராசக்தியிடம் வரம் வாங்கி இருக்கிறார்கள். இப்படிப் பட்டவர்களை

எப்படி ஒழிப்பது?'' என்று யோசிக்க லானார். முடிவில் அவர் ஆதிபரா சக்தியை தியானம் செய்தார். ''ஆதி பராசக்தி! உன் உதவி இல்லாமல் நான் இந்த ராட்சஸர்களை வெல்ல முடி யாது. ஏனெனில் நீ இவர்களுக்கு வரம் அளித்திருக்கிறாய். அதனால் இவர்கள் இறக்க நீயேதான் வழி சொல்ல வேண்டும்''

இவ்வாறு வேண்டிய விஷ்ணு வைப்பார்த்து ஆதிபராசக்தி புன்னகை புரிந்து ''நான் ராட்சஸர்களை மாயை யில் ஆழ்த்தி விடுகிறேன். அப்போது அவர்களை வென்று விடலாம்.'' என்று கூறினாள். அப்போது ராட்சஸர் கள் விஷ்ணுவைப் பார்த்து ''தோற்றுப் போகப்போவதற்காக பயப்படுகி றாயா? வீரர்களுக்கு வெற்றி தோல்வி என்பது சகஜம். நீ பல ராட் சஸர்களை வென்றிருக்கலாம். ஆனால் எப் போதுமே வெற்றி உன் பக்கம் இராது. சில சமயங்களில் தோற்கத்தான் வேண்டும்'' என்றார்கள்.

இதே சமயம் தேவி பராசக்தி மன் மத பாணங்களை எய்வது போல அந்த ராட்சஸர்களைப் பார்த்தாள். அதனால் அவர்கள் தாம் புரிந்து வந்த போரை மறந்து மன்மத பாணத்தால் தாக்குண் டார்கள். அப்போது விஷ்ணு ''நானும் எவ்வளவோ பேர்களுடன் சண்டை போட்டிருக்கிறேன். ஆனால் உங் களைப் போல யாரையும் பார்த்த தில்லை. உங்களுக்கு ஏதாவது வரம் வேண்டுமானால் கேளுங்கள் கொடுக்கிறேன்'' என்றார்.

அவர்களோ மாயையில் சிக்கிய தால் கர்வத்தோடு ''நீயா எங்களுக்கு



வரம் கொடுக்கப்போகிறாய்? வேண் டாம். நாங்களே நீ கேட்கும் வரத்தை அளிக்கிறோம். என்ன வேண்டுமோ கேள்'' என்றார்கள்.

விஷ்ணுவும் ''அப் படியா? ரொம்ப சந்தோஷம். என்னுடன் போர் புரிவதில் மகிழ்ச்சி என்றால் என் கையால் நீங்கள் மடிய வேண்டும். இது தான் நான் கேட்கும் வரம்'' என்றார்.

இப்போது அவர்கள் சற்று யோசித்து ''நீ கூட எங்களுக்கு வரம் கொடுப்பதாகக் கூறினாயே. நாங்கள் கேட்கிற வரத்தைக் கொடுத்தால் நீ கேட்ட வரத்தைக் கொடுக்கிறோம். எங்களை தண்ணீரே இல்லாத பரந்த பிரதேசத்தில் கொல். அப்போது உன் கையால் மடிகிறோம்'' எனக் கூறி னார்கள். விஷ்ணுவும் ''சரி. நீங்கள் கூறிய பகுதிக்குப் போகலாம்'' என்றார்.



அவர்கள் மூவரும் ஓரிடத்திற்குச் சென்றனர். ராட்சஸர்கள் தம் உடல்களைப் பெரிதாக்கிக் கொண்டே போக விஷ்ணுவும் தம் உடலைப் பெரிதாக்கிக் கொண்டே போனார். அப்போது விஷ்ணுவுக்குத் தம் சக்கிராயுதத்தைப் பற்றிய நினைவு வந்தது. அதை வரவழைத்து ராட்சஸர்களின் தலைகளை வெட்டித் தள்ளினார். அவர்களது தலைகள் ஒரு நீர் மடுவில் விழ அங்கு ஒரு பெரிய மேடு ஏற்பட்டது.

### வியாசரின் தவம்

முனிவர்கள் சூதரிடம் ''வியாசரைப் பற்றி சொல்லிக் கொண்டே வந்து பாதியில் நிறுத்தி விட்டீர்களே. மீதியைச் சொல்லுங்கள்'' என்று கேட்கவே சூதரும் வியாசரின் தவம் பற்றி சொல்லலானார்.

நாரதர் கூறிய மந்திரத்தை வியாசர் சுவர்ணகிரியில் அமர்ந்து உச்சரித்தவாறே தவம் செய்யலானார். அவர் தேவி பராசக்தியை தியானம் செய்து தவம் செய்ததால் உலகமே நடுநடுங்கியது. அந்தக் கடும் தவத்தைக் கண்டு பயந்த இந்திரன் சிவபெருமானைக் கண்டு ''வியாசரின் கடும் தவத்தால் ஆபத்து வரும் போலிருக்கிறது. எங்களைக் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டினான்.

சிவபெருமானும் ''தவம் செய்பவர்களின் தவத்தைக்கலைக்கக் கூடாது. அவர்களும் யாருக்கும் கெடுதல் செய்ய மாட்டார்கள். வியாசர் தனக்குக் குழந்தை வேண்டும் என்று தான் சக்தியோடு கூடியுள்ள என்னைக் குறித்துத் தவம் செய்கிறார்.'' எனக் கூறி அவர் உடனே வியாசர் முன்

தோன்றினார். அவருக்கு குழந்தை பிறக்கும் என வரம் கொடுக்கவே வியாசர் தம் ஆசிரமத்திற்கு வந்தார்.

வியாசர் அக்கினியை மூட்டி "எனக்கு இந்த அக்கினி போன்ற புதல்வன் பிறப்பானா? அப்படிப்பட்ட பெண் எனக்குக் கிடைப்பாளா?" என்று நினைத்தார். அப்போது ஆகாயத்தில் கிருதாட்சி தோன்றவே கூடவே மன்மதனும் வந்தான். வியாசர் மன்மத பாணத்தால் தாக்கப்பட் டாலும் அவர் தம் மனதில் "இவள் என்னை ஏமாற்ற வந்திருக்கிறாளா? அல்லது என்னோடு சேர்ந்து இருப்பாளா?" என்றெல்லாம் யோசிக்கலானார்.

கிருதாட்சியோ வியாசர் சபித்து விடுவாரோ எனப் பயந்து கிளியாக மாறிப் பறந்து போனாள். ஆனால் வியாசரின் ஹோம அக்கினியிலிருந்து சுகர் பிறந்தார். வியாசர் சுகரைப் பார்த்து "ஓ! இதென்ன அதிசயம்? இது சிவபிரானின் அனுக்கிரகமோ" என்று எண்ணினார். அவர் தன் மகனான சுகரை கங்கைக்குக் கொண்டு போய்க் குளிப்பாட்டினார். பிறகு ஜாதகர்மம் நடக்க தேவர்கள் பூமாரி பொழிந்தனர். நாரதர் இசை பாட, ரம்பை, ஊர்வசி போன்றோர் நடனம் ஆடினார்கள்.

கிளி ரூபமாக வந்த கிருதாட்சியினால் அக்குழந்தை பிறந்ததால் வியாசர் அதற்கு சுகர் என்று பெயரிட்டார். சுகர் வளர்ந்து பெரியவராகவே அவருக்கு மான் தோல், கமண்டலம், கைத்தடி முதலியன ஆகாயத்தில் இருந்து கிடைத்தன. வியாசர் அவருக்கு உபநயனம் செய்து பிரம்மோபதேசமும் செய்தார். தக்க குருவிடம் கல்வி பயில அவரை அனுப்பினார்.

படிப்பை முடித்துக் கொண்டு திரும்பி வந்த சுகருக்கு வியாசர் திருமணம் செய்து வைக்க எண்ணினார். ஆனால் சுகர் அதற்கு இணங்காமல் தனக்கு உபதேசம் செய்யும்படி வேண்டினார். வியாசரும் பல அறிவுரைகளைத் தம் மகனுக்குக் கூறினார்.

பிறகு அவர் "நீ பிரம்மசரியமே மேற் கொண்டிருக்க உறுதி பூண்டிருக்கிறாய். நான் எழுதிய தேவி பாகவதத்தைப்படி. அப்போது உன் மனம் தெளிவு பெறும்" எனக் கூறி அது பற்றிச் சொல்லத் தொடங்கினார்.

(தொடரும்)





# கிருஷ்ணபூபதி

*(சென்ற இதழின் தொடர்ச்சி)*

''நீங்கள் எண்ணியது போல நான் க்ஷத்திரிய குலப்பெண் தான். மேலும் உங்கள் தாய் மாமனும் குசத்தீப மன்னருமான சந்தனவர்மனுக்கு அவரது அத்தை வழியில் உறவினள். என் தந்தை கோபாலசேனரும் மன்னர் சந்தனவர்மனும் ஆருயிர் நண்பர்கள். அதனால் எங்கள் குடும்பம் அரச குடும்பத்துடன் மிக நெருக்கமாகப் பழகி வந்தது.

எங்கள் குடும்பம் இந் நாட்டிலிருந்து தான் குசத்தீபத்திற்குக் குடி பெயர்ந்து சென்றது. ஜோதி ரத்னாவும் நானும் இணைபிரியா நண்பர்கள். அவளை விட நான் வயதில் ஒரு மாதமே சிறியவள். உங்கள் தந்தை இறந்த செய்தி கேட்டு உடனேயே சந்தனவர்மன் இந்நாட்டிற்கு அவசர அவசரமாக விரைந்து வந்தார். அவர் விரைவில் குசத்தீபத்திற்குத் திரும்பி வந்து விடுவாரென நாங்கள் எதிர் பார்த்தோம். ஆனால் அவர் இங்கு தங்கி அந்நாட்டு ஆட்சிப் பொறுப்பை மால்யவந்தனுக்குக் கொடுத்தது கண்டு திகைத்தோம். அப்போது என் தந்தை சந்தனவர்ம மன்னரின் அந்தரங்க ஆலோசகராகப் பணியாற்றி வந்தார்.

முதலில் ஒழுங்காக ஆட்சி புரிந்த மால்யவந்தன் கொஞ்சம் கொஞ்சமாக மனம் மாறி வருவதை என் தந்தை கவனித்தார். இது ஆபத்து என உணர்ந்து அவசரப்பட்டு எதுவும் செய்

சுதா கிருஷ்ணசாமி

யாமல் மால்யவந்தனின் துரோகச் செயல்களுக்கான சாட்சியங்களைச் சேகரிக்கலானார். அவற்றை அவ்வப் போது புறா அஞ்சல் வாயிலாக இங் குள்ள சந்தனவர்மனுக்கு அனுப்ப லானார். ஆனால் அவை சந்தனவர்ம மன்னருக்குக் கிடைக்காமல் மால்ய வந்தனிடம் போய்ச் சேர்ந்தன. இதற் குக் காரணம் அந்த அஞ்சல் துறையின் அதிகாரி மால்யவந்தனின் கையாளாக இருந்ததே.

இது என் தந்தைக்குத் தெரியாத தால் தான் அனுப்பிய கடிதங்கள் எல்லாம் சந்தனவர்மனுக்குக் கிடைத் துக் கொண்டிருக்கின்றன என எண்ணி விட்டார். மால்யவந்தனோ என் தந்தையை வரவழைத்து அவரை சித் திரவதை செய்து கொன்று விட்டான். இது எங்களுக்குத் தெரியவில்லை. என் தந்தையை மிக அவசர வேலை யின் காரணமாக மலய தீபத்திற்கு அனுப்பி இருப்பதாக மால்யவந்தன் எங்க ளிடம் கூறினான்.

ஆனால் சில நாட்களிலேயே மால்யவந்தனின் கெட்ட எண்ணம் எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. இதனால் அவனது அவையில் பணி புரிந்த நாலைந்து ராஜ விசுவாசம் கொண்ட ஊழியர்கள் மால்யவந்த னின் துரோகச் செயல்களை எதிர்த் தனர். அவர்களுக்கும் என் தந்தைக்கு ஏற்பட்ட கதியே ஏற்பட்டது. அப் போது தான் எங்கள் தந்தை மலய தீபத்திற்கு அனுப்பப்படவில்லை என்றும் கொல்லப்பட்டார் என்பதும் எங்களுக்குத் தெரிய வந்தது.

இந்தக் காட்டில் கோண்டர்கள் என்னும் மலைச் சாதியினர் வாழ்கி



றார்கள். அவர்கள் காட்டு கொரில் லாப் போர் முறைகளிலும் நவீனப் போர் முறைகளிலும் நல்ல திறன் பெற்றவர்கள். நவீனப் போர் முறை களை நான் குசத்தீபத்தில் இருந்த போது கற்றுக் கொண்டவள். நான் வாட்போர் புரிய நன்கு கற்றுக் கொண் டது கண்டு மன்னர் சந்தனவர்மனே என்னை வெகுவாகப் பாராட்டி வந் தார். இவ்வாறு போர்க்கலையில் தேர்ச்சி பெற்ற நான் ஆண் வேடத்தில் அவர்களிடையே கலந்து, அங்கு தங்கி அவர்களது கொரில்லாப்போர் முறைகளையும் நன்கு கற்றுக் கொண் டேன். அதன் பின் குசத் தீபத்திற்குத் திரும்பிச் சென்று சந்தனவர்ம மன்னர் எப்போது வருவார் என்று எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தேன்.

மன்னர் சந்தனவர்மன் குசத்தீபத் திற்குத் திரும்பி வந்ததும் அவருக்கும்



மால்யவந்தனுக்கும் கடும் போர் நிகழும் என்றும் அப்போது மன்னர் தரப்பில் இருந்து கொண்டு மால்ய வந்தனுடன் போராடி அவனைக் கொன்று பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று துடிதுடித்துக் கொண்டிருந் தேன். அதற்காக நான் எனது நம்பிக் கைக்குப் பாத்திரமான ஒரு தோழியின் வீட்டில் மறைந்து இருந்தேன்.

சந்தனவர்ம மன்னரும் நான் எதிர் பார்த்தபடியே மலயதீபத்திலிருந்து குசத்தீபத்திற்கு வந்தார். ஆனால் என்ன நடந்தது? நான் எதிர்பார்த்தபடி போர் நடக்கவில்லை. மால்யவந்தன் வஞ்சகமாக மன்னரை வரவேற்பது போல் நடித்துக் கொன்று விட்டான். ஆம் அவன் விஷமாலையை மன்ன ருக்கு அணிவித்து மூச்சு திணறும் படிச் செய்து அவரைக் கொன்று விட் டான். ஒரு சொட்டு ரத்தம் கூடச் சிந் தாமல் மால்யவந்தன் நாட்டை அடைந்து விட்டான். யாரை நம்புவது யாரை நம்பாமல் இருப்பது என்ற நிலையில் ராணி தன் மகள் ஜோதி ரத்னாவுடன் நாட்டை விட்டு வெளியேறினாள்.

ராணியும் ஜோதிரத்னாவும் மலய தீபத்திற்குத்தான் போயிருப்பார்கள் என்று மால்யவந்தன் உட்பட யாவ ரும் நம்பினார்கள். கண்மூடிகண் திறப்பதற்குள் இந்த சம்பவங்கள் எல்லாம் நிகழ்ந்து என் ஆசையில் மண்ணைப்போட்டுவிட்டன. அந்த நிலையில் என்ன செய்ய வேண்டு மென்று எனக்கு எதுவுமே தோன்றவில்லை.

மனதை திடப்படுத்திக் கொண்டு நான் நிதானமாக யோசிக்கலானேன். அப்போது உங்களது வீரச் செயல் களைப் பற்றி எல்லோரும் என்னிடம் கூறினார்கள். அப்படிப்பட்ட மாவீர ராகிய நீங்கள் உங்களது தந்தை இறந்த பின் உங்களை முழுக்க முழுக்க வளர்த்த உங்கள் தாய் மாமனின் மரணம் பற்றிக் கேட்டபின் கை கட்டிக் கொண்டு சும்மா இருந்து விடு வீர்கள் என்று நான் நினைக்கவில்லை. தாங்கள் எப்படியும் குசத்தீபத்தின் மீது படை எடுத்து வருவீர்களென எதிர் பார்த்தே காட்டிற்கு வந்தேன். குசத் தீபத்திற்குச் செல்ல வேண்டுமென் றால் இந்தக் காட்டின் வழியே தானே செல்ல வேண்டும்? அதனால் நீங்கள் இங்கு வந்ததும் உங்கள் படையில் சேர்ந்து மால்யவந்தனைப் பழி வாங்குவதற்காக இங்கே உங்களை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

நீங்களும் சாமர, கலஹர தீபங்

களை வென்று விட்டு குசத்தீபத்தைக் கைப்பற்ற இந்தக் காட்டில் வந்து முகாம் போட்டீர்கள். அதன் பிறகு நான் உங்களைச் சந்தித்ததும் உங்கள் படையில் சேர்ந்ததும் உங்களுக்குத் தெரியுமே. நான் தனியாக இருந்து செய்ய முடியாததை உங்களது உதவி கொண்டு செய்து முடித்தேன். எனக்கு ஆதரவு அளித்து எனக்கு உதவிய தற்காக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.''

இவ்வாறு கலாகௌமுதி தன்னைப்பற்றி விவரமாகச் சொல்லி முடிக்கவே, அதை கவனமாகக் கேட்ட கிருஷ்ணபூபதி ''நான் அறிந்தோ அறியாமலோ எப்படியோ உனக்கு உதவி புரிந்திருக்கிறேன். அதற்கு நீ வெறும் வாய் வார்த்தை களால் மட்டும் நன்றி கூறிவிட்டால் போதாது'' என்றான்.

அதைக் கேட்ட கலாகௌமுதி திகைத்து ''ஆம். நான் உங்களுக்கு என்றென்றும் கடன் பட்டவளே. அத னால் நீங்கள் என்ன செய்யச் சொன் னாலும் அதைச் செய்யத் தயாராக இருக்கிறேன்'' என்று பணிவுடன் கூறினாள். கிருஷ்ணபூபதியும் புன் னகை புரிந்தவாறே ''நான் கிருஷ்ண பூபதி. நீயோ கலைத்துறையிலும் போர்க் கலையிலும் நன்கு தேர்ச்சி பெற்று உன் திறமையையும் காட்டி இருக்கிறாய். கிருஷ்ணருக்குச் சத்திய பாமா இருப்பது போல நீ எனக்கு இருக்க வேண்டும்'' என்றான்.

கலாகௌமுதி அவனுடைய சாதுரியப் பேச்சை ரசித்து நாணித் தலை குனிந்தவாறே ''உங்கள் இஷ்டம்'' என்றாள். அது கேட்டு



கிருஷ்ணபூபதியும் திருப்தி அடைந்த வனாய் ''கௌமுதி! என் மனதிற்குப் பிடித்தவள் நீ ஒருத்தியே. உன்னை மணந்து பட்டத்து ராணியாக்க முடி யாத நிலையில் இருக்கிறேன். ஏனெ னில் என்னை வளர்த்துப் பெரியவ னாக்கிய என் தாய் மாமனின் மகள் ஜோதிரத்னாவை நான் மணந்து கொள்ள வேண்டும் என்பது என் தாயாரின் விருப்பம். அவளது விருப் பத்தை நிறைவேற்றுவதாக நான் வாக்களித்து விட்டேன். அவள் வேண்டுமானால் பட்டத்து ராணியாக இருந்து விட்டுப் போகட்டும். ஆனால் அவள் என் இதய ராணியாக இருக்க முடியாது. அதற்கு என் மனதில் குடி கொண்டவள் நீ தான். இது உனக்கு சம்மதம் என்றால் நாம் இப்போதே காந்தர்வ விவாகம் செய்து கொள்ளலாம்'' என்றான்.



கலாகௌமுதியும் ''நான் உங்கள் பட்டத்து ராணியாகி உங்களோடு அரியாசனத்தில் அமர வேண்டுமென்று ஆசைப்படவில்லை. உங்கள் மனதில் அழியா இடம் எனக்குக் கிடைத்து விட்டால் அது போதும்'' என்றாள். அது கேட்டு கிருஷ்ணபூபதி மகிழ்ந்து அவளை அப்போதே காந்தர்வ விவாகம் செய்து கொண்டான். ஆனால் அவர்களது அந்த விவாகம் ரகசியமாகவே இருந்தது.

மலயதீபத்திற்கு கௌமுதியுடன் திரும்பி வந்த கிருஷ்ணபூபதி அவளைத்தன் தாயாருக்கு கோபால சேனனின் மகள் என்று அறிமுகம் செய்து வைத்தான். அவனது தாயார் சுனந்தாதேவியும், அவனருகே இருந்த ஜோதிரத்னாவும், அவளது தாயாரும் கலாகௌமுதியை வரவேற்று நலன் விசாரித்தார்கள்.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்ததும் கிருஷ்ணபூபதி தான் கலா கௌமுதியை மணக்க விரும்புவதாகத் தன் தாயாரிடம் தெரிவித்தான். கலா கௌமுதி கிருஷ்ணபூபதியுடன் சேர்ந்து வந்த போதே சுனந்தாதேவி இப்படித் தான் நிகழும் என ஊகித்து விட்டாள். அவள் தன் மகன் கூறியதைக் கேட்டு ''மகனே! நீ கூறியது கேட்டு மகிழ்ச்சியே அடைகிறேன். ஜோதிரத்னா விஷயமாக நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். நீ போரை முடித்து விட்டுத் திரும்பி வந்தபின் அவளைக் கண்டு பேசினாயா?'' என்று கேட்டாள்.

அவனும் ''பேசினேன். ஆனால் ஏனோ அவள் அதிக உற்சாகம் காட்டவில்லை. அது பற்றி உங்களிடம் இன்று கேட்கலாம் என்று நினைத்த போது நீங்களே பேச்சைத்துவக்கி விட்டீர்கள்'' என்றான். அப்போது சுனந்தாதேவி ''கிருஷ்ணா! ஜோதிரத்னாவை நீ மணக்க வேண்டும் என்பது உன் விருப்பமும் அல்ல, அவள் விருப்பமும் அல்ல. என் தமையன் சந்தனவர்மனின் விருப்பமே அது. சரி எப்போதாவது நீ ஜோதிரத்னாவை மணந்து கொள்ள வேண்டுமென்று நினைத்துப் பார்த்ததுண்டா?'' என்று கேட்டாள்.

அது கேட்டு கிருஷ்ணபூபதி தட்டுத் தடுமாறியவாறே ''இல்லை அம்மா. அது பற்றி நான் நினைத்தது கூட இல்லை. நீங்கள் சம்மதமா என்று கேட்டீர்கள். உங்கள் பேச்சிற்கு மறு பேச்சு பேசாத நான் சரியென்று தலையை ஆட்டினேன். அவ்வளவு தான். ஜோதிரத்னாவைப்பற்றி நீங்கள்

ஏதோ சொல்ல வந்தீர்களே. அது என்ன?'' என்று கேட்டான்.

சுனந்தாதேவியும் ''ஆமாம். அவளைப் பற்றித்தான் கூற வந்தேன். இப்போது எவ்வித வேதனையும் இல்லாமல் கூறமுடியும். நீ ரொம்பவும் கொடுத்து வைத்தவன். உன் மனதிற்குப் பிடித்த பெண்ணை கூடவே அழைத்து வந்திருக்கிறாய். அவள் உனக்கு மட்டுமல்ல, ஜோதி ரத்னாவுக்கும் பிடித்தவள்தான். ஜோதிரத்னா எந்த அரசனையும் மணந்து கொண்டு பட்டத்து ராணியாக விரும்பவில்லை. குசத்தீபத்தின் மகாராணியாகவே இருக்க விரும்புகிறாள்'' என்றாள்.

தன் தாயார் கூறியதைக் கேட்ட கிருஷ்ணபூபதி மிகவும் மகிழ்ந்து போய் ''அம்மா! நான் மட்டும் அதிர்ஷ்டசாலியல்ல, ஜோதிரத்னாவும் தான். அவள் மகாராணி ஆகப் போகிறாள். அவளை இங்கிருந்து தக்க மரியாதைகளுடனும், படைகளுடனும் குசத்தீபத்திற்கு அனுப்பிவைப்போம். நமது படை அவளுடன் செல்வதால் அவளுக்கு நம்பிக்கையைக் கொடுக்கும். விஷமிகள் ஏதாவது கெடுதல் செய்ய முயன்றால் அவர்களை நசுக்க உதவும்'' என்றான்.

அவனது தாயாரும் ''கிருஷ்ணா! இந்தப் பிரச்சினை இவ்வளவு விரைவில் எளிதாகத் தீர்ந்து விடும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. எல்லாம் நல்ல விதமாகவே முடிந்தது'' என்றாள்.

கிருஷ்ணபூபதியும் ''அம்மா! இதோடு இன்னொரு பிரச்சினையும் தீர்ந்தது. அப்போதைய சூழ்நிலையில் கௌமுதியிடம் நான் அவளை மணந்து பட்டத்து ராணியாக்க முடியாது என விளக்கிக் கூறினேன். அவளும் தான் பட்டத்து ராணியாக விரும்பவில்லை என்று கூறினாள். இப்போதோ அவள் பட்டத்து ராணியாக ஆகப் போகிறாள். இந்த நற்செய்தியை அவளிடம் கூறி விட்டு வருகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்றான்.

விரைவிலேயே முறைப்படி கிருஷ்ணபூபதிக்கும் கௌமுதிக்கும் விவாகம் நடந்தது. அவளும் பட்டத்து ராணி ஆனாள்.




இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு
வீரதீர பராக்கிரமன்
8
ஓவியம் : பாணி
கருடன் படகில் இருக்கிறான் என்று கேட்டு தளபதிகள் படகைச் சூழ்ந்து கொண்டு அதில் நினைவிழந்து கிடந்த கருடனைத் தூக்கிக் கொண்டு அரண்மனைக்கு வந் தார்கள். ஆனால் ரவீந்திரதேவன் கருடனின் முகத்திரையை விலக்கினான். அப் போது தளபதிகள் பிடித்து வந்தது கருடனை அல்ல, தன் தந்தையும் சேனாதி பதி யு மான நரேந்திரதேவன் என்பதை அவன் கண்டான். கரு டனைப் பிடிக்கும் பொறுப்பை மன்னன் ஆதித்தனிடம் ஒப்படைத்து அவனை முதலமைச்சராகவும் ஆக்கினான். ஆதித்தன் பல திட்டங் களால் மக்களுக்கு நன்மைகள் செய்தான். இதனால் மன்னன் மகிழ்ந்தான். ரவீந்திரதேவனும் நரேந்திர தேவனும் வயிற்றெரிச்சல் கொண்டனர்.


முதலமைச்சரான ஆதித்தன் அதிகாரிகளைக் கூட்டினான்
சந்திரபுரியில் அமைதி நிலவுவது கண்டு மன்னர் மகிழ்ந்து போயிருக்கிறார். நாம் எப் பாடு பட்டாவது அமைதி சீர் குலைந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.
''கொஞ்ச நாட்களாக கருடனைப் பற்றிய தகவல் எதுவுமே இல்லையே''.


சேனாதிபதி வழக்கம் போல பெருமை அடித்துக் கொள் ளவே, ஆதித்தன் புன்னகை புரிந்தான்.
கருடன் திடீரெனத் தாக்கி னாலும் தாக்குவான். அதற் கான சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறான்.
அப்படியா! அமைதியை நிலை நாட்டும் பணியை நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்.


ஆட்சி விவ காரங்களை எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்.
அவன் மட்டும் என் கையில் கிடைத் தால் கண்டதுண்ட மாக வெட்டிப் போடுவேன்.

முதலமைச்சரின் மாளிகையில் ஆதித்தன் தன் தந்தையின் ஆசிகளைக் பெற மௌனமாகப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தான். அப்போது ஏதோ சத்தம் ஏற்பட்டது.
















திட்டங்கள் உள்ளனவா?
எப்படிப்பட்டவை?
ஒவ்வொரு இடத்திலும் கலவரத்தை மூட்டுதல்!
அண்டை நாடுகளிலிருந்து ஆயுதங் களையும் வெடிமருந்துகளையும் வாங்கி வர வேண்டும்


மன்னனையும் முதலமைச்சரையும் கடத்திக் கொண்டு போய், பழியை கருடன் மீது போட வேண்டும். அதி காரிகளைக் கைக்குள் போட்டுக் கொண்டு மன்னனுக்கு வேண்டியவர் களை எல்லாம் கொன்று விட வேண்டும்.


இந்த விஷயத் தைக் கூறி என்னை எச்சரித்து நல்லகே.
தயவு செய்து நீ எச்சரிக் கையுடன் இரு
இன்று பௌர்ணமி. பூஜைக்கு நேரமாகி விட்டது.


உன் தந்தை கூறியது இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. நீ சந்திரபுரியை காக்கவே பிறந்திருக்கிறாய். கருட பகவான் உன்னைக் காக்கட்டும். விடைபெற்றுக் கொள்கிறேன்.


கருட பக வானைப் பூஜிக்க ஆரம்பித்து ஆறு பௌர்ணமிகள் கழிந்து விட்டன. இது ஏழாவது பௌர்ணமி.


கருட பகவானே. உமது சக்தியாலே நான் என் தந்தையின் பதவியில் நியமிக்கப் பட்டிருக்கிறேன். இந்த நாட்டைக் கயவர்களிடம் அகப்பட்டு விடாமல் காப்பது உன் பொறுப்பே


ஆதித்தன் பிரார்த்தனையை முடித்த போது ஒரு அற்புத ஒளிவட்டம் தோன்றி அது அறை முழுவதும் பரவியது. அது கண்டு ஆதித்தன் ஆச்சரியப்பட்டான்.


ஆதித்தா! பயப் படாதே. உனக்கு எவ் விதத் தீங்கும் நேராது.
நீ உன் பதவியை உன் சொந்த நலனுக்கு உப யோகித்துக் கொள்ளாமல் இருக்கும் வரை உனக்கு நான் உதவி வருவேன். நீ தைரியமாக அடி எடுத்து வைத்து உன் தாய் நாட்டைக் காப்பாற்று.
விக்கிரகத்திலிருந்த இறகிலிருந்து அந்த அற்புத ஒளி வெளிவருவதை ஆதித்தன் கவனித்தான்.


ஆதித்தன் அந்த அபயவாக்கைக் கேட்டபின் விக்கிரகத்தின் பாதத்திலிருந்து கிளம்பிய இறகு பறந்து பெரிதாகி வட்டம் அடித்துக் கொண்டே இருந்தது.
தொடரும்




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு டிசம்பர் 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

ஆகஸ்ட் 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:
பி. கண்ணன்
12/ 273, கண்ணதாசன் சாலை
முகப்பேர் கிழக்கு
சென்னை-600050

பரிசு பெற்ற வாக்கியங்கள்





ஆறறிவு வீட்டிலே
ஐந்தறிவு காட்டிலே

அம்புலிமாமா வருட சந்தா:

இந்தியாவில் ரூ.120/–
Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

# தமிழ்நாடு சுற்றுலா
# உங்கள் வருகைக்காக காத்திருக்கிறது...



## தென் மாநிலச் சுற்றுலாக்கள்
## உங்கள் மனதை குதூகலிக்கச் செய்யும்.

முதுமலை மற்றும் வேடந்தாங்கல் சரணாலயங்கள் மக்களை மகிழ வைக்கும். தந்தங்கள் உள்ள யானைக் கூட்டங்கள், பறவைகளின் ரீங்காரங்கள் இவையெல்லாம் உங்கள் உள்ளத்தை மகிழ வைக்கிறது. வெளிநாட்டுப் பறவைகள் சரணாலயத்தில் வந்து தங்கிச் செல்லும் காலங்கள் பார்ப்போரை பரவசமடையச் செய்வன.



மாமல்லபுரத்தின் சிறப்பு சொல்லிற் அடங்காது. பல்லவர்களின் கலை நுணுக்கத்திற்கு சான்றாக அவை பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. கடற்கரை கோயில்களும், கடலின் அலைகளும் மக்களின் உள்ளம் மகிழச் செய்யும் வண்ணம் உள்ளது. மாமல்லபுரச் சிற்பங்கள் ஒவ்வொன்றும் தமிழரின் தரத்தை உணர்த்துகிறது. தமிழ்நாடு, கோயில்களுக்குச் சிறப்புப் பெற்றது. தஞ்சையில் உள்ள பிரகதீஸ்வரர் ஆலயம் மிகவும் தொன்மை வாய்ந்தது. அங்குள்ள கலைப் பொருட்கள் உலகளாவிய சிறப்பைப் பெற்றது.

தமிழர்கள் இசையில் வல்லுநராக இருந்தார்கள் என்பதற்கு பலவகை இசைக் கருவிகளே சான்று. அதிலும், ஜலதரங்கம் என்னும் இசைக் கருவி மிகப் பிரசித்தி பெற்றது.

கலைகளின் மதிப்பு, சுற்றுலாக்களின் சிறப்பு – அதனை தமிழ்நாடு சுற்றுலா மக்களுக்கு தெளிவாக்குகின்றது.







செய்தி/1050/வரைகலை/2001.




வெளியிடுபவர் :
ஆணையர் தமிழ்நாடு சுற்றுலாத்துறை,
தமிழ்நாடு சுற்றுலா வளாகம்,
வாலாஜா சாலை, சென்னை – 600 002.
தொலைபேசி : 538 8785, 536 1640
தொலைநகலி : 538 2772
ஈ – மெயில் : *ttdc@md3.vsnl.net.in*
வெப்தளம் : *http//www.tamilnadutourism.com*



மேலும் விபரங்களுக்கு அணுகவும் :
தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்
விற்பனை பிரிவு :
4, ஈ.வெ.ரா. சாலை, (சென்ட்ரல் இரயில் நிலையம்), பார்க் டவுன்,
சென்னை – 600 003. போன் : 538 4356, 538 9132, 538 2916, 536 0294
∴பேக்ஸ் : 044 – 536 1385
ஈ – மெயில் : VSNLITBM@GEMSNETIN Internet.in
வெப்தளம் : http:www/tamilnadutourism.com

VISIT US AT : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaranthinai.com / www.southindia.com / www.webulagam.com

